உ

சிவமயம்.

# திருக்குற்றாலக்குறவஞ்சி.

இஃது,

மணிமங்கலம்.

வடிவேலுமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

பிடாரித்தாங்கல்.

நாராயணசாமிமுதலியாரவர்கள் குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1912.

சென்னை துயப்பேட்டை

படவெட்டம்மன் கோயில் வீதி நெ. 65.




# புனா சுகந்த எண்ணை.

இந்த எண்ணையிலிருக்கும் பரிமளமானது மனோரஞ்சித மலரைப்போல பலவிதவாசனையைக் கொடுக்கும். சிலவாசனை எண்ணைகள் தலைக்குத் தடவிக்கொண்டால் சற்றுநேரத்தில் மாரிவிடுவதுண்டு எங்கள் சுகந்த எண்ணை யானது இன்றைய தினம் தலைக்குத் தடவிக்கொண்டால் உங்கள் வழக்கம்பே ல் எத்தனை நாள் பொருத்து தலைமுழுகினாலும் அந்த மயிரை ஆற்றும்போது இதின் பரிமளத்தைப் பார்க்கவேணும் மயிரை வளர்ப்பதறகு எல்லா எண்ணையைவிட இந்த சுகந்த எண்ணையே முதல் தரமென்று கண்டு பிடிக்கப்பட்டது.

1-டப்பியின் விலை ரூபா-1. தபாற் கூலி அணா-5.

௪-நாலுடப்பி அதாவது ஒரேதடவை வாங்கினால் தபாற்கூலி மணியாடர்பீஸ் இந்த இரண்டு சிலவும் கழித்து அனுப்புவோம்.

என்னுடைய முழுகேட்லாக் வேண்டுமானால் அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் உடனே அனுப்பப்படும்.

எமது விலாசம்.

☞ பி. நா சிதம்பரமுதலியார்.

பிரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு மதராஸ்.

உ

சிவமயம்.

# திருக்குற்றாலக் குறவஞ்சி.

விநாயகர்-துதி.

ஆசிரியவிருத்தம்.

பூமலிபிதழிமாலை புனைந்தகுற்றாலத்தீசர்
கோமலர்ப்பாதம்போற்றிக் குறவஞ்சித்தமிழைப்பாட
மாமதத்:ருவிபாயு மலையெனவளர்ந்தமேனி
காமலிதருப்போலைந்து கைவலான்காவலாமே.

சுப்பிரமணியக்கடவுள்-துதி.

ஆசிரியவிருத்தம்.

பன்னிருகைவேல்வாங்கப்பதினொருவர்படைதாங்கப்பத்துதிக்கும்
நன்னலவீரரும்புகழமலைகளெட்டுங்கடலேழுநாடியாடப் (றாய்
பொன்னின்முடிபாறேந்தி யஞ்சுதலையெனக்கொழித்துப் புயநானமு
தன்னிருதாடருமொருவன்குற்றாலக்குறவஞ்சிததமிழ்தந்தானே.

திரிகூடநாதர் துதி-ஆசிரியவிருத்தம்.

கிளைகளாய்கிளைத்தபலாக்கொம்பெலாஞ் சதுர்வேதக்கிளைகளீன்ற
களையெலாஞ்சிவலிங்கம்கனியெலாஞ்சிவலிங்கங்கனிகளீன்ற, களையெ
லாஞ்சிவலிங்கம்வித்தெலாஞ்சிவலிங்கச்சொரூபமாக, விளையுமொருகு
றும்பலவின்முளைத்தெழுந்தசிவக்கொழுந்தைவேண்டுவோமே.

குழல்வாய்மொழியம்மைதுதி-ஆசிரியவிருத்தம்.

தவளமதிதவழ்குடுமிப் பனிவரையின்முளைத்தெழுந்து கதைசேர்முக்க
பவளமலைதனிலரசைபடர்ந்தேறிக்கொழுந்துவி...டுப்பருவமாகி
யவிழுநறைபூங்கடப்பந்தாமரையுமீனறொருகேட்டாம்பலீன்று
குவலயம்பூத்தருள்கொடியைக்கோதைகுழலவர்மொழியைகூறுவோம்

மூவர் துதி-ஆசிரியவிருத்தம்.

தலையிலேயாறிருக்கமாமிக்காகத் தாங்குகடலேழமைத்ததிருக்குற்
றாலா, சிலையிலேதடித்தடம்புயத்தைவாழ்ததிச் செழித்தகுறவஞ்சிநா
டகத்தைப்பாட, வலையிலேமலைமிதக்கவேறிணுனு மத்தியிலேபூவைய
ந்நாளழைப்பித்தானுஞ், கலையிலேகிடைத்தபொரு ளாற்றிற்போட்டுக்
கனகுலததிலெடுததானுங்காப்பதாமே.

அகத்தியர் வாதவூரர் துதி-ஆசிரியவிருத்தம்.

சித்தர்திரிகூடலிங்கர்குறவஞ்சிநாடகத்தை நிகழ்த்தவேண்டி
முத்தர்திருமேனியெல்லா முருகவேள்தமிழுரைத்தமுனியைப்பாடி
இத்தரையிலாத்துமம்விட்டிறக்குநாட்சிலேட்டுமம்வந்தேறுவண்ணம்
பித்தனடிதுணைசேர்ந்தவாதவூரானடிகள்பேணுவோமே.

## சரஸ்வதிதுதி-ஆசிரியவிருத்தம்.

அடியிணைமலருஞ்செவ்வா யாம்பலுஞ்சிவப்பினுளை
நெடியபூங்குழலுமைக்க ணீலமுற்கறுப்பினுளைப்
படிவமும்புகழுஞ்செங்கைப் படிகம்போல்வெளுப்பினுளைக்
கொடிதனைத்திருக்குற்றாலக் குறவஞ்சிக்கியம்புவோமே.

## நூற்பயன்-ஆசிரியவிருத்தம்.

சிலைபெரியவேடனுக்குநரிக்கும்வேதச் செல்வருக்குந்தேவருக்குமி ரங்கிமேனுட், கொலைகளவுகட்காமங்குறுத்துரோகங் கொடியபஞ்ச பாதகமுந்தீர்த்ததாலே, நிலவணிவார்குற்றாலநினைத்தபேர்கணினைத்த வரம்பெறுவரது நினைக்கவேண்டிப், பலவளஞ்சேர் குறவஞ்சிநாடகத் தைப் படிப்பவர்க்குங்கேட்பவர்க்கு பலனுண்டாமே.

## அவையடக்கம்-ஆசிரியவிருத்தம்.

தாரினைவிருப்பமாகத் தலைதனில்முடிக்குந்தோறும்
நாரினைப்பொல்லாதென்றே ஞாலததோர்தள்ளுவாரோ
சீரியதமிழ்மாலைக்குட் செல்வர்குற்றாலநாதர்
பேரினுலெனதுசொல்லைப் பெரியவர்தள்ளார்தாமே.

## கட்டியக்காரன் வருகிற-விருத்தம்.

தேர்கொண்டவசந்தவீதிச் செல்வர்குற்றாலத்தீசர்
பார்கொண்டவிடையிலேறும் பவனியெச்சரிக்கைகூற
நேர்கொண்டபுரிநூன்மார்பு நெடியகைப்பிரம்புமாக
கார்கொண்டமுகிலேறென்னக் கட்டியக்காரன்வந்தான்.

## இ-ம்-தோடி-தாளம்-சாப்பு.

### கண்ணிகள்.

க. பூமேவுமநுவேந்தர்முதலோரைப்
புரந்திடுஞ்செங்கோலானபிரம்புடையான்

உ. மாமேருச்சிலையாளர்வாசர்குற்றாலநாதர்
வாசற்கட்டியக்காரசன்வந்தனனே.

## கட்டியக்காரன்சொல்லுகிற-விருத்தம்.

மூக்கெழுந்தமுத்துடையாரணிவருக்கை நன்னகரமூதூர்வீதி, வா க்கெழுந்தகுறுமுனிக்காய்மறியெழுந்த கரங்காட்டுமவள்ளலார்சீர்த், தேகமெழுந்தமறைநான்கு சிலம்பெழுந்தபாதர்விடைச் சிலம்பிலேறி, மேக்கெழுந்தமதிசூடிக் கிழக்கெழுந்த ஞாயிறுபோல் மேவினாரே.

## திரிகூடநாதர்பவனிவருதல்.

## தரு-இ-ம்-பந்துவராளி -தாளம்-சாப்பு.

### பல்லவி.

பவனிவந்தனரே-மழவிடை-பவனிவந்தனரே.

## அரு பல்லவி.

அவனிபோற்றியகுறும்பலாவுறைமவுனநாயகரேவனநாயகர்
சிவனுமாயரியயனுமானவர்களால்விடையதனிலே (பவனி)

## சரணம்.

க. அண்டர்கூட்டமுமுனிவர்கூட்டமு மசுரகூர்ட்டமு மனிதாகிய, தொண்டர்கூட்டமு மிமையிலாரெனச் சூழ்ந்துதனித்தனி மயங்கவே பண்டைநாரிவர்தேவரிவரென பகுத்துநிறுவியவேளைதொறுந்தொறும், மண்டலீகரைநந்திபிரம்படிமகுடகோடியிற்புடைக்கவே. (பவ)

உ. தடுப்பதொருகரங் கொடுப்பதொருகரந் தரித்தசுடர்மழு விரித்ததொருகரம், எடுத்தசிறுமறிபிடித்ததொருகரமிலங்கப் பணியணிதுலங்கவே, அடுத்தவொருபுலிகொடுத்தசோமனு மானைகொடுத்தவிதானச்சேலையும், உடுத்ததிருமருங்கசையயமாலயன் றெடுத்த பரிகரிமிசையவே. (பவ)

ங. தொடருமொருபெருச்சாளியேதிய தோன்றல்செயப் படைத்தாங்கவே, யாடல்குலாவியதோகைவாகனத் தரசுவேல்வலம் வாங்கவே, படலமார்பினிற் கொன்றைமாலிகை பதக்கமணியொளி தேங்கவே, யுடையநாயகன்வரவுகண்டுலகெலாந் தழைத்தோங்கவே. (பவ)

ச. இடியின்முருக்கொடுபடருமுகிலெனயானை மேற்கெனபேரிமுழக்கமுந் துடியின்முழக்கமும்பாந்து திசைக்கரிதுதிக்கையாற் செவிபுதைக்கவே, அடியர்முழக்கியதிருப்பல்லாண்டிசை யடைத்தசெவிகளுந்திறக்கமூவர்கள், வடிசெய்தமிழ் திருமுறைகளொருபுற மறைகளொரு புறம்விளங்கவே. (பவனி)

ரு. கனத்தரும்புரு இன்னரங்கமலாகவீணைமிழற்றவே
யானகாதிருமுத்தின்சிவிகைபொன்னுல்வட்டகிழற்றவே
வநிதைமார்பலகுஞ்சஞ்சாமரைவரிசைவிசிரிசுழற்றவே
தனதனிந்திரன்வருணன்முதலியசகலதேவரும் வழுத்தவே. (பவ)

சு. சைவர்மேலிடச்சமணர்கீழிடச்சகலசமயமுமேற்கவே
கைவலாழியங்கருணைமாலொடுகமலத்தோன்புடைகாக்கவே
ஐவர்நாயகன்வந்தனன்பலவமரர்நாயகன்வந்தனன்
தெய்வநாயகவந்தனெனச்சின்னமெடுத்தெடுத்தார்க்கவே. (பவ)

எ. சேனைப்பெருக்கமுந்தானைப்பெருக்கமுந் தேன்பெருக்கமுந் தாரின்பெருக்கமும், ஆனைப்பெருக்கமுங்குதிரைப்பெருக்கமு மவனிமுழுதினும்நெருங்கவே, மோனைக்கொடிகளின் காடுநெடுவெளிமூடியடங்கலுமோடியிருண்டபி, னேனைச்சுடர்விரி யிடபகேதன மெழுந்துதிசைதிசைவிளங்கவே. (பவனி)

அ. கொங்குமலர்க்குழல்தெய்வமங்கையகுரவைபாவையைநெருக்க
வே யொத்ததிருச்செவியிருவர்பாடல்களுலகமேழையுமுருக்கவே
மத்தளம்புயல்போன்முழங்கிடமயிலனார்நடம்பெருக்கவே
சத்திபிரவிகௌரிகுழன்மொழித்தையலாளிடமிருக்கவே. (பவ)

## பவனிகாணப்பெண்கள் வருகிற

## விருத்தம்.

மாலேறும்விடையில்வருந்திரிகூடப்பெருமானார்பவனிகாணக்
காலேறுங்காமனுக்கைமேறும்படைப்பவுஞ்சாய்க்கன்னிமார்கள்
சேலேறுங்கலகவிழிக்கணைதீட்டிப்புருவவெடுஞ்சிலைகள்கோட்டி
மாலேறப்பொருதுமென்றுமணிச்சிலம்புமுரசறையவருகின்றாரே.

## பெண்கள் சொல்லுகின்ற-கண்ணிகள்.

இ-ம்-புன்னாகவராளி-சாப்புதாளம்.

௧, ஒருமானைப்பிடித்துவந்த பெருமானைத்தொடர்ந்துவரு
மொருகோடிமான்கள்போல வருகோடிமடைவார்

௨, புரிநூலின்மார்பனிவனயனென்பாரயனாகிப்
பொங்கரவமேதுதனிச் சங்கமேதென்பார்

௩, விரிகருணைமாலென்பார்பாலாகில்விழியின்மேல்
விழியுண்டோமுடியின்மேல் முடியுண்டோவென்பார்

௪, இருநாலுநான்முகனுந்திருமாலுமவருகையா
லீசனிவன்திரிகூட வாசனிவனென்பார்

௫, ஒருகைவளைபூண்டபெண்கள்ஒருகைவளைபூணமறந்
தோடுவார்நகைப்பவரை நாடுவார்கமிழ்வார்

௬, மெய்வளையுமறுவுடையதெய்வநாயகன்முடித்த
வெண்மதியும்விளங்குதெங்கள் பெண்மதியோவென்பார்

௭, இருகனத்துரவிக்கைதன்னையரையிலுடைதொடுவார்
இந்தவுடைரவிக்கையெனச் சந்தமுலைக்கிடுவார்

௮, கருதுமனம்புறம்போகக் கண்ணுக்குமையெடுத்த
கையமாயொருகண்ணிட்ட மையுமாய்வருவார்

௯, திருபணிவன்னகரத்தெருவிலேநெடுநேரம்
நில்லானோஒருவசனஞ் சொல்லானோவென்பார்

௰, கைவளைத்துக்கிடக்குமிவன்மெய்வளையும்பாம்புகட்குப்
பசியாதோதென்றலைத்தான் வென்பார்

௰௧, இவ்வளைக்கைத்தோளழுந்தவிவன்மார்பிலழுந்தாத
தென்னமுலைநமக்கெழுந்த வன்னமுலையென்பார்

௰௨. மைவளையுங்குழல்சோரக் கைவளைகொண்டானிதென்ன
மாயமோசடைதரித்த ஞாயமோவென்பார்

## வசந்தவல்லி வருகின்ற விருத்தம்.

நன்னகர்ப்பெருமான்போய் நாணமுங்கலையுந்தோற்ற
கன்னியற்கதப்போர்காட்டிக் காமவேள்கலக்கமூட்டிப்
பொன்னணிதிலதந்தீட்டிப் பூமலர்மாலைசூட்டி
வன்னமோகினியைக்காட்டி வசந்தமோகினிவந்தாளே.

இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. வங்காரபூஷணமும்பூட்டித்-திலதந்தீட்டி
மாரனைக்கண்ணாலேமருட்டிச்
சிங்காரமோகனப்பெண்ணாள்வசந்தவல்லி
தெய்வரம்பைப்போலவேவந்தாள்

உ. கண்ணுக்குக்கண்ணிணைசொல்லத்-திரிகூடற்
கண்ணுதலைப்பார்வையால்வெல்லப்
பெண்ணுக்குப்பெண்மயங்கவே-வசந்தவல்லி
பேடையன்னம்போலவே-வந்தாள்

ங. கையாரக்கூடகமிட்டு-மின்னாரை-மின்னாரைவெல்லக்
கண்ணிலொருநாடகமிட்டு
ஒய்யாரமாகநடந்து-வசந்தவல்லி
யோவியம்போலவேவந்தாள்

ச. சல்லாபமாதுவிலர்-குற்றாலநாதர்
சங்கநெடும் வீதிதனிலே
உல்லாசமாதுரதிபோல-வசந்தவல்லி
யூர்வசியுநாணவேவந்தாள்.

இதுவுமது.

இ-ம்-பைரவி-அடதாளசாப்பு.

கண்ணிகள்.

க. இருண்டமேகஞ்சுற்றிச்சுருண்டுசுழி யெறியுங்கொண்டையாள்கு
எறியாடிநஞ்சைச்சூறையாடும்விழிக்கொடையாள் (மை
திருந்தபூமுருக்கினரும்புபோலிருக்குமிதழினாள் வரிச்
சிலைப்போல்வளைந்து பிறையைப்போலிலங்குநுதலினாள்

உ. அரம்பைதேசவில்லும்விரும்பியாசைசொல்லும்புருவத்தாள்பிறர்
அறிவைமயக்குமொருகருவமிருக்குமங்கைப்பருவத்தாள்
கரும்புபோலினித்துமருந்துபோல்வடித்தசொல்லினாள்-கடல்
கத்துந்திரைகொழித்தமுத்துநிரைபதித்தபல்லினாள்

ங. பல்வினமழகையெட்டிப்பார்க்குமூக்கிலொரூமுத்தினாள்-மதி
படரும்வடிவுதங்கியழகுகுடிகொளுமுகத்தினாள்
வில்லுப்பணியுனைந்தவல்லிக்கமுகைவென்றகழுத்தினாள்-ஜகம்
விலையிட்டெழுதியின்பநிலையிட்டெழுதுந்தொய்யிலெழுத்தினா

ச. கல்லுப்பதித்ததங்கச்செல்லக்கடகமிட்டசெங்கையாள்-எங்குங்
கச்சுக்கிடக்கினுந்திதிச்சுக்கிடக்குமிருகொங்கையாள்
ஒல்லுங்கருத்தர்மனக்கல்லுஞ்சுழிக்குமெழிலுந்தியாள்-மிது
ஒழுங்குகொண்டுள்ளத்தைவிழுங்குஞ்சிறுரோமபந்தியாள்

ரு. துடியுள்ளடங்கியொருபிடியுள்ளடங்குஞ் சிறுரோமபந்தியாள்-கா
துட்டனரண்மனைக்குக்கட்டுங்கதலிவாழைத்துடையினாள் (மத்

அடுக்குவர்ணச்சேலையெடுத்துநெறிபிடிக்கவுடையினுள்-மட
வன்னநடையிலொருசின்னநடையினுள்
சு. வெடித்தகடலமுதையெடுத்தவடிவுசெய்தமேனியாள்-ஒரு
வீமப்பாகம்பெற்றகாமப்பாலுக்கொத்தசீனியாள்
பிடித்தசுகந்தவல்லிக்கொடிபோலசந்தவல்லிசெருக்கமே-சத்தி
பீடவாசர்திரிகூடநாதர்சித்தமுருக்குமே.

வசந்தவல்லி பந்தடிக்கின்ற

விருத்தம்.

வித்தகர்திரிகூடத்தில் வெளிவந்தவசந்தவல்லி
தத்துறுவிளையாட்டாலோ தடமுலைபணைப்பிலோ
நத்தணிகரங்கள்சேர்ப்ப நாலடிமுன்னேயோங்கிப்
பத்தடிபின்னேவாங்கிப் பந்தடிபயில்கின்றாளே.

இ-ம்-பைரவி சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. செங்கைவண்டுகலீர்கலீரென்று செயஞ்செய மென்றாட-இடை
சங்கதமென்றுசிலம்பொடுதண்டைகலந்தாட இரு (மலர்ப்
பொங்கொடும்பகைவென்றனமென்றுகுழைந்துகுழைந்தாட
பைங்கொடிநங்கைவசந்தசௌந்தரிபந்துபயின்றனளே
உ, பொங்குகனங்குழைமணங்கியசெண்டைபுரண்டுபுரண்டாடகுழல்
குயில்வண்டுத்தலைந்ததுகண்டுமதன்சிலைவண்டோட-இனி
இங்கிதுகண்டுலகென்படுமென்டுமென்றிடைதிண்டாட - மலர்ப்
பங்கயமங்கைவசந்தசௌந்தரிபந்துபயின்றனளே
ங, சூடகமுன்கையில்வாள்வளைகண்டிருதோள்வளைநின்றாட-புனை
பாடகமுஞ்சிறுபாதமுமங்கொருபாவனைகொண்டாட-நய
நாடகமாடியகோதையயிலெனநன்னகர்வீதியிலே-அணி
யாடகவல்லிவசந்தவொய்யாரியடர்ந்துபந்தாடினளே
ச, இந்திரையோவிவள்சுந்தரியோதேவரம்பையேமோகினியோ- மன
முந்தியதோவிழிமுந்தியதோகாமுந்தியதோவெனவே-உயர்
சந்திரசூடர்குறும்பலவீசுரர்சங்கணிவீதியிலே-மணிப்
பைந்தொடிகாரிவசந்தவொய்யாரிபொற்பந்துகொண்டாடினளே.

இதுவும்வசந்தவல்லிபந்தாடுகின்ற

விருத்தம்.

கொந்தொடிப்பூங்குழல்சரியநன்னகரில் வசந்தவல்லிகொடியமகன்
முந்தடிபிந்நடியிடைபோய்முகறநாலடிநடந்துமுடிகிமாதா
சந்தடிபிற்றிருகிபிடசாரிவலசாரிகற்றிச்சகிமார்சூழப்
பந்தடிக்கும்பாவனையைப்பார்க்கவயனுயிரங்கண்படைத்திலானே.

தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பந்தடித்தனள் வசந்தசுந்தரி-விந்தையாகவே

அநுபல்லவி.

மந்தரமுலேயேசலாடமகரக்குழைகளூசலாடச் சுந்தரவிழிபூசலாடத்
தொங்கத்தொங்கத்தொங்கத்தொம்மெனப் பந்த

சரணங்கள்.

க. பொன்னிறெளிவில்வந்துகாவியமின்னிறெளிவுபோலவே
சொன்னயத்தனைநாடிநாடித்தோழியருடன்கூடிக்கூடி
நன்னகர்த்திரிகூடம்பாடிநகுர்தந்திகுதிகுர்த்தோமெனப் பந்த

வசந்தவல்லி-சுவாமிகளைக்காண்கின்ற

விருத்தம்.

வருராங்குவீதிதன்னில் வசந்தபூங்கோதைகாலி
விருபந்துகுதிகொண்டாட விருபந்துமுலேகொண்டாட
வொருபந்துகைகொண்டாட வொருசெப்பிலஞ்சிபந்துத்
தெருவந்துவித்தையாடுஞ் சித்தரையெதிர்கண்டாளே.

தரு-இ-ம்-அடாணு-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தச்சித்தராரோ-வெகு

அநுபல்லவி.

விந்தைக்காரராகவிடையில்வந்தாரே

சரணங்கள்.

க. நாகம்புயத்திற்கட்டிநஞ்சுகழுத்திற்கட்டி
நாகமணுகாமலெங்குங்காடுகட்டி
பாகந்தனிலொருபெண்பச்சைக்கிளிபோல்வைத்து
மோகமாயொருபெண்ணைமுடியில்வைத்தார் இந்தச்

உ. மெய்யிற்சிலம்பழகுங்கையின்மழுவழகும்
மையார்விழியார்கண்டால்மயங்காரோ
செய்யசடையின்மேலேதிங்கட்கொழுந்திருக்கப்
பையவிரிக்குதம்மாபாம்புசும்மா இந்தச்

ந. அரைக்கண்பார்வையாலேயனங்கன்றங்கமாக
உருக்கிப்பேட்டார்கண்டவுடனேதான்
பெருக்கம்பார்க்கிலெங்கள்திருக்குற்றாலர்போல
விருக்குதிவர்செய்மாயமொருக்காலே இந்தச்

தோழிமார்சொல்லக்கேட்டு

வசந்தவல்லிமோகங்கொள்ளுதல்

விருத்தம்.

திங்களைமுடித்தார்கண்டாய் திரிகூடச்செல்வர்கண்ட
யெங்குளசித்துக்கெல்லா மிறையவரிவரேயென்று
நங்கைமார்பலருங்கூற நன்மொழித்தேறன்மார்த்தி
மங்கையர்வசந்தவல்லி மனங்கொண்டாள்மயல்கொண்டாளே.

இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

௧. முனிபுரவுவினியானோமுழுப்பலவின்கனிதானோ
கனியில்வைத்தசெந்தேனோகருத்துருக்கவந்தானோ
தினகரன்போற்சிவப்பழகுந்திருமிடற்றிற்கரு பழகும்
பனகவணிக்காதுங்கண்டாற்பாவையுந்தானுருகிடாதோ

௨. வாகனைக்கண்டுருகுதையோமயக்கமாய்வருகுதையோ
மோகமென்பதிதுதானோமுன்னமேநானறிவேனோ
ஆகமெல்லாம்பசுந்தேனேயன்னைசொல்லுங்கசந்தேனே
தாகமன்றிப்பூணேனேசரிவளையுங்காணேனே.

பாங்கிகள்-புலம்பல்.

விருத்தம்.

நடைகண்டாலன்னந்தோற்கு நன்னகர்வசந்தவல்லி
விடைகொண்டானெதிர்போய்ச்சங்க வீதியிற்சங்கந்தோற்று
சடைகொண்டானுடைதான்கொண்டு தன்னுடைகொடுத்தானைய
னுடைகொண்டவழக்குத்தானோ வூர்கண்டதேர்கண்டானே.

இ-ம்-தோடி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. ஆசைகொண்டுபாரில்வீழ்ந்தாள்நேசமானென்பார்-விளை
யாடாபாடாள்வாடாமாலைசூடாள்காணென்பார்
பேசொணுதோமோசமென்னமோசமோவென்பார்
பேயோவென்பார்பிச்சோவென்பார்மாயமோவென்பார்

௨. ஐயோவென்னசெய்வோமென்பார்தெய்வமேயென்பார்-கனைப்
பாச்சோவென்பார்மூச்சேதென்பார்பேச்சேதோவென்பார்
கையிற்றிருநீறிடுப்பார்தையலாரெல்லாம்-சூலக்
கையாதிரிகூடநாதாகண்பார்யென்பார்

வசந்தவல்லியைப்-பாங்கிகளுபசரித்தல்.

விருத்தம்.

வானவர்திருக்குற்றாலர்மையலால்வசந்தவல்லி
தானுடல்சோர்ந்தாளென்றுதமனியமாடஞ்சேர்ந்து
மேனையாரழுதுதோற்ற மின்னனார்விழிந்தபேரைக்
கூனைகொண்டமிழ்த்துவார்போற் குளிர்ச்சியாய்ச்செப்புவாரே.

இ-ம்-கல்யாணி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. முருகுசந்தனக்குழம்புபூசுவார்-விரகத்தீயை
மூட்டிமூட்டிவிசிறிவீசுவார்
கருகுதேயுடலுருகுதேயென்பார்-விரிதற்பூவுங்
கரியுதேமுத்தம்பொரியுதேயென்பார்

உ. அருகிலிருந்துகதைகண்டத்துவார்-எடுத்துமாதர்
அணைத்துவாழைக்குறித்திற்கிடத்துவார்
பெருகுநன்னகர்க்குறும்பலாவினர்-வசந்தமோகினி
பெருநிலாவினெடுகுலாவினள்.

வசந்தவல்லி-சந்திரதூஷணஞ்செய்தல்.

விருததம்.

பெண்ணிலோர்குழன்மொழிக்கோர்
பங்குகொடுத்தவர்கொடுத்தபிரமையாலே
மண்ணிலேமதிமயங்கிக்கிடக்கின்றே
னுனக்குமதிமயக்கந்தானோ
கண்ணிலேநெருப்பைவைத்துக்
காந்துவாருடன்கூடிக்காந்திக்காந்தி
விண்ணிலேநெருப்பைவைத்தாய்
தண்ணிலாக்கொடும்பாவிவெண்ணிலாவே.

இ-ம்-வராளி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. தண்ணமுதுடன்பிறந்தாய் வெண்ணிலாவே-அந்தத்
தண்ணளியையேன்மறந்தாய் வெண்ணிலாவே
பெண்ணுடன்பிறந்ததுண்டோ வெண்ணிலாவே-என்றன்
பெண்மைகண்டுங்காயலாமோ வெண்ணிலாவே

உ. விண்ணிலேபிறந்தவர்க்கோ வெண்ணிலாவே-ஏரு
விட்டுநாளெரிந்ததற்கோ வெண்ணிலாவே

கண்ணில்விழியாதவர்போல் வெண்ணிலாவே-மெத்த
காந்தியாட்டமாடுகிறாய் வெண்ணிலாவே

ங. ஆகடியம்செய்தல்லவோ வெண்ணிலாவே-நீதா
ஞட்படியம்போற்குறைந்தாய் வெண்ணிலாவே
மோகம்வரக்காணேனென்றால் வெண்ணிலாவே-அந்த
வேகமுனக்கானதென்ன வெண்ணிலாவே

ச. நாகமென்றேபெண்ணவேண்டாம் வெண்ணிலாவே-இது
வாகுகுழல்பின்னல்கண்டால் வெண்ணிலாவே
கோகனகவீறழித்தாய் வெண்ணிலாவே-திரி
கூடலிங்கர்முன்போய்க்காய்வாய் வெண்ணிலாவே

வசந்தவல்லிமன்மததூஷணஞ்செய்தல்

விருத்தம்.

தண்ணிலாமௌலிதந்தமையலானதையறிந்துதையலர்கள் [ரோ
எண்ணிலாப்பகையெடுத்தாரின்னகரை நன்னகரென்றெவர்சொன்ன
அண்ணலார்திரிகூடநாதரென்பாரென்னளவுமறைந்திட்டாரோ
வெண்ணிலாக்குடைபிடித்து மீனகேதனம்பிடித்தவேனிலானே.

இ-ம்-எதுகுலகாம்போதி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. கைக்கரும்பென்னகணையென்னநீயென்ன மன்மதா-இந்தச்
செக்கரும்பாவிநிலாவுமேபோதாதோ மன்மதா
மைக்கருங்கண்ணுளிரதிக்குமால்கொண்ட மன்மதா-விடை
வல்லார்க்குமால்கொண்டபொல்லாப்பென்மேலுண்டோ மன்மதா

உ. திக்கெல்லாந்தின்றற்புலிவந்துபாயுதே மன்மதா-குயிற்
சின்னம்பிடித்தபின்னம்பிடியாதே மன்மதா
அக்காளெனுஞ்சகிவெட்காமலேசுவாள் மன்மதா-அவ
ளல்லாமற்றுமொருபொல்லாதநீலிகாண் மன்மதா

ங. சேரிழையாரையுமூரையும்பாரடா மன்மதா-கண்ணில்
நித்திரைகாணொருசத்துருவாச்சுதே மன்மதா
பேரிகையென்றிபூரிகையேன்பிள்ளாய் மன்மதா-சிறு
பெண்பிள்ளைமேற்பொருதாண்பிள்ளையாவையோ-மன்மதா

ச. வார்சடையீதல்லதார்குழற்பின்னல்காண் மன்மதா-நெற்றி
வந்தநுகண்ணல்லசிந்தூரரேகைபார் மன்மதா

நாரிபங்காளர்தென்னாரியநாட்டினர் மன்மதா-உங்கள்
நன்னகர்குற்றாலர் முன்னமேசொல்லுவாய்மன்மதா

### பாங்கிவினவுதல்-விருத்தம்.

படியேழுடையார்திரிகூடப் படைமாமதனைப்பயிற்றியசொல்
அடியேசகியாதிருக்கையிலே யதுநான்பயின்றுலாகாதோ
கொடியேமதுரம்பழுத்தொழுகுங்கொம்பேவம்புபொருதமுலைப்
பிடியேயெமதுகுடிக்கொருபெண் பிள்ளாய்கருத்துவிள்ளாயே.

### வசந்தவல்லி-பாங்கிக்குரைத்தல்.

இ-ம்-கல்யாணிசாப்புதாளம்.

கண்ணிகள்.

க. மெய்யர்க்குமெய்யாதிரிகூடநாயகர்மீதில்-மெத்த
மையல்கொண்டேனந்தச்செய்தியைக்கேளாய்நீசகியே
செய்யச்சடையுந்திருக்கொன்றைமாலையழகு-மவர்
கையின்மழுவுமென்கண்ணைவிட்டேயகலாதே.

உ. கங்கைக்கொழுந்தணிதெய்வக்கொழுந்தைநான்கண்டு-குளிர்
திங்கட்கொழுந்தையுந் தீக்கொழுந்தாக்கிக்கொண்டேனே
சங்கக்குழையாரைச்சங்கமறுகினிறகண்டு-இரு
செங்கைக்குட்சங்கமுஞ்சேர்ந்துமருவிட்டேனே.

௩. மன்றற்குளவிதினங்கொட்டக்சொட்டநொந்தேனே
தென்றற்குளவிதினங்கொட்டக்கொட்டநொந்தேனே
குன்றச்சிலையாளர்குற்றாலநாதர்முன்போனேன்-மதன்
வென்றிச்சிலைகொண்டுமெல்லவெல்லப்பொருதானே.

௪. பெம்மானைநன்னகர்ப்பேராஜவீதியிற்கண்டு
மைந்தனைக்கண்டுதலையைநெகிழவிட்டேனே
செம்மேனிதன்னிற்சிறகறுப்பாநாநான்கண்டு-இப்போ
அம்மாவென்மேனியடங்கலுமேகறுத்தேனே.

௫. வெள்ளிவிடையில்வியாழம்புனைந்தாரைக்கண்டு-இந்த
நள்ளியதிங்களைஞாயிறுபோலக்கண்டேனே
எள்ளளவூணுமுறக்கமுமில்லாரைக்கண்டு-நானும்
ஒள்ளியவூணுமுறக்கமுமற்றுவிட்டேனே.

### பாங்கிபழித்தல்-விருத்தம்.

தரைப்பெண்ணுக்கணுபோல்வந்த தமனியக்கொடியேமாதர்
துரைப்பெண்ணேவசந்தவல்லி சொன்னபேதமைக்கென்சொல்வேன்
வரைப்பெண்ணுக்காசைபூண்டு வளர்சங்கமறுகினூடே
நரைத்தமாடேறுவார்க்கோ நங்கைநீமயல்கொண்டாயே.

## வசந்தவல்லி சுவாமிகளைப் புகழ்ந்துகூறல்.

இ-ம்-சௌராஷ்டிரம்-ரூபகதாளம்.

கண்ணிகள்.

மன்னவர்குற்றாலர்செய்தியின்னமின்னங்கேளாயோமானே-அவர்
வாகனத்தின்மால்விடைக்குலோகமெல்லாமோரடிகண்மானே
சன்னிதியின்பேறல்லவோபொன்னுலகிற் றேவர்செல்வமானே-தின
சந்திரரும்சூரியரும்வந்திறங்கும்வாசல்கண்டாய்மானே [ஞ்
நன்னகரிலிருக்குநாளொருத்திதானோவாசைகொண்டேன்மானே
கன்னியருமாசைகொண்டார் பன்னியருமாசைகொண்டமானே
தென்னிலங்கைவாழுமொருகன்னிகைமண்டோதரியாள்மானே-அவர்
பொன்னடியிற்சேர்ந்தணையளன்னதவஞ்செய்தாள்மானே.

## இதுவும்வசந்தவல்லிபாங்கிகளுக்குச்சொல்லுகிற

## விருத்தம்.

வேரிலேபழம்பழுத்தூரிலேசுளைவெடித்துவெடித்ததீந்தேன்
பாரிலேபாதாளகங்கைவந்ததெனக்குதித்தபதித்தேன்கங்கை
நீரிலேசுளைபெருகுங்குறும்பெலாங்கொலுவிருக்குநிமலமூர்த்தி
பேரிலேபிரமைகொண்டபெண்களிலேநானுமொருபெண்கடாமே.

## பாங்கிசொல்-விருத்தம்.

வசந்தவுல்லாசவல்லிவல்லிக்குமெல்லிபேசி
பசந்தசோர்பசப்புங்கண்டாய்பரமன்மேலாசைகொண்டாய்
கிசந்தருந்திருக்குற்றால நிரந்தரமூர்த்தியுன்பா
லிசைந்திடக்கருமமேதோவிசையநீயிசைத்திடாயே.

## வசந்தவல்லிவருந்துதல்.

இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. புரத்துநெருப்பைமூவர்க்கவித்தவர்மையல்கொண்ட வென்
ஞொருத்திகாமநெருப்பையவிக்கலார்
பருத்தமலையைக்கையிலிணக்கினார் கொங்கையான்
பருவமலையைக்கையிலிணக்கிலார்

உ. அஞ்சுதலைக்குளாறுதலைவைத்தோர் எனதுமனதினில்
அஞ்சுதலைக்கோராறுதலைவையார்
நஞ்சுபருக்கியமுதங்கொடுத்தவர் எனதுவாள்விழி
நஞ்சுபருக்கியமுதங்கொடுக்கிலார்

ந. தேவர்துரைதன்சாபந்தீர்த்தவர் வன்னமாங்குயிற்
சின்னத்துரைதன்சாபந்தீர்ந்திலார்
யாவரும்புகழ்திருக்குற்றாலர்தாம் சகலபேர்க்கு
மிரங்குவாரெனக்கிரங்கிலார்பெண்ணே

பாங்கிசொல்லுகிற-விருத்தம்.

நன்னகர்திருக்குற்றாலநாதர்மேலாசைபூண்டு
சொன்னவர்க்கிணங்காவார்த்தைசொல்லவும்படித்துக்கொண்டாய்
சன்னிதிவிஷேசஞ்சொல்லத்தக்கதோமிக்கதோதான்
என்னிலானதுநான்சொன்னேனினியுனதிச்சைநானே.

வசந்தவல்லிபாங்கியைத் தூதனுப்புதல்

தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

தூதுநீசொல்லிவாராய்பெண்ணே-குற்றாலர்முன்போய்த்
தூதுநீசொல்லிவாராய்பெண்ணே.

அநுபல்லவி.

ஆதிநாட்சுந்தரர்க்காய்தூதுபோனவர்பரலே தூதுநீ

சரணங்கள்.

க. உறங்கஉறக்கமும்வாராதுமாயஞ் செய்தாரைமறந்தால்மறக்கவுங்கூடாது-பெண்ஜனனமென்றுபிறந்தாலும் பேராசையாகாதுஆகாதென்றுநான் அறிந்துஞ்சலுக்கைக்காரர்க் காசையானேனிப்போது (தூது)உ நேற்றைக்கெல்லாங் குளிர்ந்துகாட்டி-இன்றுகொதிக்கும் நித்திலாப்பாவிக்கென்னபோட்டி-நடுவேயிந்தக் -காற்றுக்குவந்ததொரு கோட்டி விரகநோய்க்கு-மாற்றுவருந்து முக்கண்மருந்தென்று பரஞ்சாட்டி(தூது)ந. வந்தாலிந்நேரம்வரச்சொல்லு-வராதிருந்தால்-மாலையாகிலுந்தரச்சொல்லு - குற்றாலநாதர் தந்தாலென்னெஞ்சைத்தரச்சொல்லு தராதிருந்தால்-தாம்பெண்ணாகிய பெண்ணை நான்விடேனென்றுசொல்லு (தூது)

வசந்தவல்லி-பாங்கிக்குச் சந்திசமயஞ் சொல்லுதல்

விருத்தம்.

செவ்வேளையின்றருள்வார்சிலவேளையேன்றருள்வார்திரும்பத்தாமே
யவ்வேளையழைத்தருள்வா ரார்வேளையொருவருக்குமறியொண்ணாதா
கைவேழமுரித்தவர்குற்றாலர்கொலுவமரருக்குங்காணொணாதால்
எவ்வேளைபலவுமுண்டு வியல்வேளையான்சொலக் கேண்மின்னனாளே.

தரு-இ-ம்-பியாகடை-ஆதிதாளம்.

க. திரிகூடராஜருக்குத்திருவனந்தல்முதலாகத்
தினமுமொண்பதுதரங் கொலுவிற்சகியே

உ. பெரிதானவபிஷேகமெழுகாலமுமொருவர்
பேசுதற்குச்சமயமல்ல கண்டாய்சகியே

ந. வருநாளிலொருமூன்று திருநாளும்வசந்தனு
மாதவழிவருஷவழி சிறப்புஞ்சகியே

௪. ஒருநாளுக்கொருநாளில்வியனுகக்குழன்மொழிப்பெண்
ணுகந்திருக்குங்கொலுவேளை கண்டாய்சகியே

௫. பெத்தரிக்கமிகுந்திருக்குங்குற்றாலநாதலிங்கர்
பெருங்கொலுவிற்சமய மறியாமற்சகியே

௬. சித்தரொடுதேவர்கணஞ்சிவகணச்கள்தடைசெயத்
திருவாசற்கடைநிற்பார் சிலபேர்சகியே

௭. அத்தலைப்பிற்கடந்தவர்கள்நந்திபிரம்படிக்கொதுங்கி
ஆட்கொண்டார்குறட்டில்நிற்பார் சிலபேர்சகியே

௮. மைந்தருங்கணமாதர்விட்டவண்டுகளும்கிள்ளைகளும்
வாசல்தொறுங்காத்திருக்கும் கண்டாய்சகியே

௯. கோலமறையோதியசங்கரவிசுவநாதனகுள்
குற்றாலச்சிவராமகம் செய்யுஞ்சகியே

௰. பாலாறுநெய்யாறுயபிஷேகநைவேத்தியமும்
பணிமாறுகாலமுங் கொண்டருளிச்சகியே

௰௧. நாலுமறைப்பழம்பாட்டுமூவர்சொன்னதிருப்பாட்டு
நாலுகவிப்புலவர்புதுப் பாட்டுஞ்சகியே

௰௨. நீலகண்டர்குற்றாலர்தேவியுடன்கொலுவிருப்பார்
ஆசைசொல்லக்கூடாது கண்டாய்சகியே

௰௪. முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்வந்துநின்று
முயற்சிசெய்யுந்திருவநந்தற் கூடிச்சகியே

௰௫. கொப்பழகுகுழன்மடந்தைபள்ளியறையிருந்து
கோயில்புகுமேகாந்தச் சமயஞ்சகியே

௰௬. மைப்பழகுவிழியாயென்பெருநாளைநீசொல்லி
மறுமாலைவாங்கிநீ வாராய்சகியே

கொச்சகம்.

தெண்ணீர்வடவருவித்தீர்த்தத்தாற்செஞ்சடைமேல்
விண்ணீர்புனைந்தார்விரகவெம்மைக்காற்றமல்
கண்ணீர்நறும்புனலாய்க்கைவளையேசெய்தரையாய்
உண்ணீரிற்கூடலுரைகிணறுசெய்வாளே.

கூடல்சிந்து.

இ-ம்-பந்துவராளி-தாளம்-திரிபுடை.

௧. பாடியமறைதேடியநாயகர்பன்னகர்பணிநன்னகர்நாயகர்
பாவலர்மனுக்காவலர்நாயகர்பதஞ்சலிபணியாளர்

௨. கோடியமதிசூடியநாயகர்குழன்மொழிபுனலாகியநாயகர்
குறும்பலாவினிற்கூடுவார்மேனிற்கூடலேநீகண்டாய்

## விருத்தம்.

ஆடல்வளை வீதியிலே யங்கணர் முன்போட்டசங்கமாங்குவீட்டில், தேடல்வளைக்குறிபோலக்கூடல் வளைத்திருந்துவல்லி தியங்கும்போதில், கூடல்வனைக்கரமசையமாத்திரைக்கோலேந்திபணிக் கூடைதாங்கி, மாடமறுகூட திரிகூடமலைக்குறவஞ்சி வருகின்றாளே.

### குறத்திவருதல்-ஆசிரியப்பா.

சைவமுத்திரைசைவானின்மேற்றருக்குந்
தெய்வமுத்தலைசேர்திரிகூடமலையான்
வான்புனல்குதட்டுமடைக்குருகினுக்குத்
தேன்புரையேறுபூஞ்சித்திரநதியான்
ஏரிநீர்செழிக்கவாரிநீர்கொழிக்கு
மாரிநீர்வளர்தென்னாரியநாட்டான்
கன்னிமாப்பழுத்துக்கதலிதேன்கொழித்துச்
செந்நெல்கரத்தளிக்குநன்னகர்ப்பதியான்
ஓராமறையோங்கியபரியான்
ஈராயிரமருப்பேந்தியயானையான்
சேவகவிருதுஜெயவிடைக்கொடியான்
மூவகைமுரசுமுழங்குமண்டபத்தான்
அண்டகோடிகளையாணையாலடக்கிக்
கொண்டல்போற்கவிக்குங்கொற்றவெண்குடையான்
வாலசுந்தரிகுழல்வாய்மொழியருட்கண்
கோலவண்டிணங்குங்கொன்றைமாலிகையான்
பூவளர்செண்பகக்காவளர்தம்பிரான்
தேவர்கள்தம்பிரான் திருவருள்பாடி
இறகுசீறணிந்துதிலகமுமுழுகிக்
குலமணிப்பாசியுங்குன்றியும்புனைந்து
சலவைசேர்மருங்கினிற்சாயத்தியகூடையும்
வலதுகைப்பிடித்தமாத்திரைக்கோலும்
மொழிக்கொருசப்புமுலைக்கொருகுலுக்கும்
விழிக்கொருசிமிட்டு வெளிக்கொருபகட்டுமாய்
உருவசியாம்பைகருவமுமடங்க
முறுவலின்குறும்பால்முனிக்குறும்படங்க
சமனிக்குமுரையால்சபையெலாமடங்கக்
கமனிக்குமவனுங்கடைக்கண்ணாலடங்கக்
கொட்டியவுடுக்குங்கோடாங்கிக்குறிமுதல்

பட்டிலாக்குறிகளுங்கட்டினுலடக்கிக்
கொங்கணமாரியங்குச்சிலாதேசமும்
கொங்கைமாத்திரைக்கோல்செங்கோல்நடாத்தி
கன்னடந்தெலுங்குகலிங்கராச்சியமுந்
தென்னவர்தமிழால்செய்ததம்பநாட்டி
மன்னவர்தமக்குவலதுகைநோக்கி
காலமுன்போங்குறிகைப்பலனுங்குறி
மேலினிவருங்குறிவேண்டுவார்மனக்குறி
மெய்க்குறிகைக்குறிவிழிக்குறிமொழிக்குறி
எக்குறியாயினுமிமைப்பினிலுரைக்கு
மைக்குறிவிழிக்குறவஞ்சிவந்தனளே.

இதுவுமது-விருத்தம்.

சிலைநுதலிற்கஸ்தூரிதிலதமிட்டு நறுங்குழலிற்கெச்சைசூடிக், கொலைமாதர்க்கண்மையெழுதி மாத்திரைக்கோல்வாங்கி!!மணுக்கூடைதாங்கி, முலைமுகத்திற்குன்றிமணி வடம்பூண்டுதிரிகூடமுதல்வாசரல், மலைதனிற்போனவஞ்சிகுறவஞ்சியபரஞ்சிகொஞ்சிவருகின்றளே.

தரு-இ-ம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

வஞ்சிவந்தனளே-மலைக்குற-வஞ்சிவந்தனளே.

அநுபல்லவி.

வஞ்சியெழிலபரஞ்சிவரிவிழிநஞ்சிமுழுமறநஞ்சிபலவினை
வஞ்சிசடைமுடிவிஞ்சையமலனைநெஞ்சினினைவொடுமிஞ்சுகுறிசொல

சரணங்கள்.

வல்லிநிகர்முலையில்லையெனுமிடை வில்லைபணிநுதல்முல்லைபெருநகைவல்லியெனவொருகொல்லிமலைதனில் வல்லியவளிலும்மெல்லியிவளென ஒல்லிவடகனடில்லிவரைபுகல் புல்லில்வருகுறி சொல்லிமதுரிதல்லிபனினைமலைவல்லிகுழன்மொழிச் செல்வியுணர்பவர்கல்விமலைக்குற. (வஞ்சி)

உ. குன்றிலிடுமழை மின்மிகளெனநிரை குன்றிவடமுலைமுங்கவேமன்றல்கமழ்சிறு தென்றல்வருவழிநின்றுதாளமிலங்கவே ஒன்றிவிரதியுமொன்றில்மதனனுமூசலிடுகுழைபொங்கவே என்றுமெழுதியமன்றில்நடமிடுகின்றசரணினர்வென்றிமலைக்குற. (வஞ்சி)

ந. ஆடுமிருகுழைதோடுமொருகுழற்காடுமிணைவழி சாடவேநோடுபொருமுலைமூடுசலவயினூடுபிதிங்கிமலாடவேதோடு முரளிவராளிபயிரவிதோடிபெறவிசைபாடியே நீடுமலைபிலாடுமலைமதி சூடுமலைதிரிகூடமலைக்குற. (வஞ்சி)

## குறத்தியைவர்ணித்தல்.

### கொச்சகக்கலிப்பா.

முன்னங்கிரீவளைத்த முக்கணர்குற்றாலர்வெற்பில்
கன்னங்கரியகுழற் காமக்குறவஞ்சி
பொன்னின்குடம்போற் புடைத்தெழுந்தபாரமுலை
யின்னம்பருத்திட்டா லிடைபொறுக்கமாட்டாதே.

### தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

#### பல்லவி.

வஞ்சிவந்தாள்-மலைக்குற-வஞ்சிவந்தாள்

#### அநுபல்லவி.

வஞ்சிவந்தாள்திரிகூடரஞ்சிதமோகினிமுன்னே
மிஞ்சியவிரகநோய்ச் சஞ்சீவிமருந்துபோலே (வஞ்சி)

#### சரணங்கள்.

௧. மும்மையுலகெங்கும்வெல்லக்கொம்மைமுலையார்க்கும்நல்ல
செம்மையாய்குறிகள்சொல்ல அம்மேயம்மேஎன்றுசொல்ல-வ

௨. சோலையில்வசந்தகாலம்வாலம்வாலகோகிலம்வந்தாற்போல்
கோலமலைவில்லியார்குற்றாலமலைவாழுங்குற. (வஞ்சி)

௩. மாத்திரைக்கோலதுதன்னச்சாத்திரக்கண்பார்வைபன்னத்
தோத்திரவடிவமின்னப்பூத்தமயிர்கொடியென்ன (வஞ்சி)

## வசந்தவல்லிகுறத்தியைக்கண்டு மலையைவினவுதல்.

### ஆசிரியவிருத்தம்.

அந்தரதுந்துமிமுழங்குநன்னரர்க்குற்றாலலிங்கரருளைப்பாடி
வந்தகுறவஞ்சிதன்னைவசந்தவல்லிகண்டுமனமகிட்சிகொண்டு
சந்தமுலைத்துவளுமிடைத்துவளநடைப்பவளவிதழ்தையலேயுன்
சொந்தமலையெந்தமலையளந்தமலைவளமெனக்குச்சொல்லென்றனே.

## குறத்திசொல்லல்.

### இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

#### கண்ணிகள்.

௧. வானரங்கள்கனிகொடுத்து மந்தியொடுகொஞ்சம்
மந்திசிந்துகனிகளுக்கு வான்கவிகள்கொஞ்சம்

௨. கானகர்கள்விழியெறிந்து வானவரையழைப்பார்
கமனசித்தர்வந்துவந்து காயசித்திவிளைப்பார்

௩. தேனருவித்திரையெழும்பி வானின்வழியொழுகும்
செங்கதிரோன்பரிக்காலுந் தேர்க்காலும்வழுக்கும்

௪. கூனலிளம்பிறைமுடித்த வேணியலங்காரர்
குற்றாலத்திரிகூட மலையெங்கள்மலையே

௫. முழங்குதிரைப்புனலருவி கழங்கெனமுத்தாடும்
முத்தமெங்கும்பரந்துபெண்கள் சிற்றிலைகொண்டாடும்

௬. கிழங்குகிள்ளித்தேனெடுத்து வளம்பாடிநடப்போம்
கிம்புரியின்கொம்பொடித்து வெம்புதினையிடிப்போம்

௭. செழுங்குரங்குதேமாவின் பழங்களைப்பந்தடிக்கும்
தேனலர்சண்பகவாசம் வானுலகம்வெடிக்கும்

௮. வழங்குகொடைமகாராசர் குறும்பலவிலீசர்
வளரும்பெருகுந்திரிகூட மலையெங்கள்மலையே

௯. ஆடுமரவீனுமணி கோடிவெயிலெறிக்கும்
அம்புலியைக்கவளமென்று தும்பிவழிமறிக்கும்

௰. வேடுவர்கள்தினைவிரைக்கச் சாடுபுனந்தோறும்
விந்தையகில்குங்குமமுஞ் சந்தனமும்நாறும்

௰௧. காடுதொறுமோடிவரை யாடுகுதிபாயும்
காகமணுகாமலையில் மேகநிரைசாயும்

௰௨. நீடுபலவீசர்கையி லாசகிரிவாசர்
நிலைதங்குந்திரிகூட மலையெங்கள்மலையே

௰௩. கயிலையெனும்வடமலைக்குத் தெற்குமலையம்மே
கனகமகமேருவென நிற்குமலையம்மே

௰௪. கயிலைமலைதென்மலைக்கு வடக்குமலையம்மே
சகலமலையென்றனக்கு ளடக்கமலையம்மே

௰௫. வயிரமுடன்மாணிக்கம் விளையுமலையம்மே
வானிரவிமழைகள்தொறு நுழையுமலையம்மே

௰௬. துயிலுமவர்விழிப்பாகி யகிலமெங்குந்தேடும்
துங்கர்திரிகூடமலை யெங்கள்மலையம்மே

௰௭. கொல்லிமலையெனக்கிளைய செல்லிமலையம்மே
கொழுநனுக்காணிமலை பழனிமலையம்மே

௰௮. எல்லுலவும்விந்தமலை யெந்தைமலையம்மே
இமையமலையென்னுடைய தமயன்மலையம்மே

௰௯. சொல்லரியசாமிமலை மாமிமலையம்மே
தோழிமலைநாஞ்சிநாட்டு வேழ்விமலையம்மே

௨௰. சொல்லினங்கள்முழவுகொட்ட மயிலினங்களாடும்
திரிகூடமலையெங்கள் செல்வமலையம்மே

௨௧. ஒருகுலத்திற்பெண்கள்கொடோம் ஒருகுலத்திற்கொள்ளோம்
உறவுபிடித்தாலும்விடோங் குறவர்குலம்நாங்கள்

௨௨. வெருவிவருந்தினைப்புனத்திற் பெருமிருகம்விலக்கி
வேங்கையாய்வெயில்மறைத்த பாங்குதனைக்குறித்தே

௨௩. அருளிலஞ்சிவேலர்தமக் கொருபெண்ணைக்கொடுத்தோம்
ஆதினத்துமலைகளெல்லாஞ் சீதனமாய்க்கொடுத்தோம்

உச. பாதிமதிசூழ்மலையைத் தருவனுக்குக்கொடுத்தோம்
பரமர்திரிகூடமலை பழையமலையம்மே

வசந்தவல்லிகுறத்தியை-நாட்டுவளமும்-நகர்வளமும்-வினவுதல்.

விருத்தம்.

கேட்டுவளமுனநாட்டேக்கொடியின் வளமிடைகாட்டுகுறிஞ்சிபூத்த
காட்டுவளங்குழல்காட்டுமலைவளந் தானீயுரைத்துக்காட்டுவரனேன்
தோட்டுவளம்புரிகாதர்திரிகூடமலைவளந்தோகையேயுன்
னாட்டுவளமெனக்குரைத்துகுற்றாலத்தலவளமுநவிலுவாயே.

குறத்தி-சொல்லுதல்.

இ-ம்-கேதாரகௌளம்-தாளம்சாப்பு.

கண்ணிகள்.

க. சூரமாங்குயிற்சின்னங்காமத்துரைவந்தான் துரைவந்தானென்றா
ஆரமாமுலைமின்னாரவரல்குற்றேர்களலங்காரஞ்செய்யப், பாரமா
மதிவெண்குடைமிஞ்சப்பரக்குந் கிள்ளைப்பரிகள் மீன்கொஞ்சத்,
தேரின்மாரன்வசந்தனுலாவுந்திருக்குற்றாலர்தென்னாரியநாடே.

உ. கரைசேர்த்தகுழலார்க்குநாணிக்கடலைச்சேர்ந்தகறுப்பானமேகம்
சேர்ந்தமுலைக்கிணையாகு மலையைச்சேர்ந்துடலை யொன்றுவாங்கி
நீரைச்சார்ந்தாரையம்பொடு நிலக்கொண்டவின்தேரேறி வெய்
யோன், தேவரைச்சூழ்ந்திடக்கார்காலம் வெல்லுதிருக்குற்றாலர்
தென்னாரியநாடே.

ங. கூழைவசற் பலர்வினிற்பாய்க்கொழும் பலாக்கனிவழையிற்சாயல்
வாழைசாய்க்தொருதாழைபிற்றுக்கவருவிருந்துகுபசரிப்பார்போல்
தாழைசோறிடதாழைகுடுத்திடுஞ்சந்திரசூடர்தென்னாடே.

ச. அன்னலார்மொழிதன்னைப்பழித்ததென் றூடவர்மண்ணின்மூடுக
ரும்பு, துன்னியமீளர்ந்துமடந்தையர்தோளைவென்று சுடகமுத்தீ
யன்று, பின்னுமங்கவர்மூரலைவென் றுபிரியுங்காலத்திற்பெண்மை
யைவெல்ல, கன்னல்வேளுக்குவில்லாகவோங்குங் கடவுளாரியநா
டெங்கணுடே.

ரு. தக்கபூமிக்குமுன்புள்ளநாடுசகலதேவர்க்குமன்புள்ளநாடு. முக்க
கண்ணன்விளையாடியநாடு மூவர்பாடிப்புகழ்ந்திட்டநாடு, திக்கெல்லா
ம்வளர்ந்தோங்கியநாடு சிவத்துரோகமுநீங்கியநாடு, மைக்கண்ணாள்
குழல்வாய்மொழிபாகர் வசந்தவாரியநாடெங்கணுடே.

சு. அஞ்சுநூறுமகங்கண்டநாடு அனேகங்கோடியுகங்கண்டநாடு
கஞ்சயோனியுதிக்கின்றநாடு கமலவாணிதுதிக்கின்றநாடு
கெஞ்சொன்மாமுனியேகியநாடு செங்கண்மால்சிவனாகியநாடு
வஞ்சிபாத்திரிகூட நாதர்வசந்தவாரியநாடெங்கணுடே.

எ. மாதமுன்றும்மழையுள்ளநாடு வருஷமுன்றுவிளைவுள்ளநாடு
வேதமுன்றும்பலிவுள்ளநாடு விசேஷமுன்றுங்குலாவுள்ளநாடு
போதமுன்றுநவஞ்செய்யுநாடு புவனமுன்றும்வலஞ்செயுநாடு
நாதமுன்றுவானகுற்றாந்த நாரியநாடெங்கணுடே.

அ. நீங்கக்காண்பதுசேர்ந்தவாபாவம் நெருங்கக்காண்பது கன்னலிற் றொங்நெல், தூங்கக்காண்பதுமாம்பழக்கொத்துசுழலக்காண்பது தீந்தயிர்மத்து, வீங்கக்காண்பது மங்கையர்கொங்கை வெடிக்கக் காண்பதுசொல்லையின்முல்லை, ஏங்கக்காண்பதுமங்கலபேரிகை யீசராரியநாடெங்கணுடே.

கூ. ஓடக்காண்பதுபூம்புனல்வெள்ளம் ஒடுங்கக்காண்பதுயோகியருள்ளம், வாடக்காண்பதுமின்னுர்மருங்குல்வருந்தக் காண்பதுசூலுளைச்சங்கு, போடக்காண்பதுபூமியிலழித்து புலம்பக்காண்பதுகிண்ணிக்கொத்து, தேடக்காண்பதுநல்லறக்கீர்த்தி திருக்குற்றாலர்தென்னுரியணுடே.

### குறத்தி தலமகிமைசொல்லுதல்.

### விருத்தம்.

அரிகூடவயன்கூடமறைகூடதினந்தேடவரிதாய்நின்ற
திரிகூடப்பதியிருக்குந் திருநாட்டுவளமுரைக்கத்தெவிட்டாதம்மே
கரிகூடப்பிடிதிரியுஞ் சாரலிலேயொருவேடன்கைவில்லேந்தி
நரிகூடக்கைலைசென்ற திரிகூடத்தலமகிமைநவிலக்கேளே.

### இ-ம்-பிலகரி-தாளம்-ஜம்பை.

### கண்ணிகள்.

க. ஞானிகளுமறியார்கள்சிகரநதிமூல
நானறிந்தவகைகளிதுசொல்லக்கேளம்மே
மேன்மைபெருந்திரிகூடத்தேனருவித்துறைக்கே
மேவுமொருசிவலிங்கத்தேவரகசியமாய்
ஆனதுரையயனுமுரைத்தானுமறியாமல்
அருந்தவத்துக்காய்த்தேடித்திரிந்தலையுங்காலம்
மேலானவானவர்க்கெங்கள்கானவர்கள்காட்டு
மூதுகங்கையாறுசிவமாதுகங்கையாராரே.

உ. சிவமதுகங்கையின்மகிமைபுவனமெங்கும்புகழும்
செண்பகாடவித்துரையின்பண்புசொல்லக்கேளாய்
தவமுனிவர்கூட்டுறவும்வரிக்குந்திசையுஞ்
சஞ்சீவிமுதலானவிஞ்சைமூலிகையும்
கவனசித்தராகியருமௌனயோகியருங்
காத்திருக்குங்கயிலாயமேற்றிருக்குமம்மே
நவநிதியும்விளையுமிடம்விடமதுகடந்தால்
நங்கைமார்குரவையொலிபொங்குமாகடலே,

ந. பொங்குகடல்திரிவேணிசங்கமெனச்செழிக்கும்
பொருந்துவசித்ரநதித்துறையிற்பொன்னுமுத்துங்கொழிக்கும்
கங்கையென்றவடவிருதக்குந்திரசாபம்
கலந்தாடக்கழிநீராய்த் தொலேந்தோடும்பாதம்
சங்கைவீதியிற்பறந்துசங்கினங்கள்மேவும்
தழைத்தமதியிற்சிகரமெங்குந்தொழுதக்கயல்பாயும்
கொங்கலர்செண்பகசோலை சூழும்பலவாவிசர்
குற்றாலத்திரிகூடத்தலமெங்கள்தலமே.

ச. மன்றுதனில்தெய்வமுற்றென்றுமேன்முழங்கும்
வளமைபெறுஞ்சதுர்யுகம்மகிமையெனவழங்கும்
ஈன்றமதகரிபூசையன்றுசெய்ததலமே
இந்தசெய்யுட்பதந்தன்வந்தனைசெய்தவமே
பன்றியொடுவேடன்வலஞ்சென்றதிந்தத்தலமே
பற்றுகப்பரமருறைகுற்றாலத்தலமே
வென்றிபெறுந்தேவர்களுங்குன்றமால்மரமாய்
மிருகமதாய்த்தவசிருக்கும் பெரியதலமம்மே.

வசந்தவல்லி - கிளைவினவுதல்.

விருத்தம்.

தீர்த்தவிசேடமுந்தலத்தின் சிறந்தவிசேடமுமுரைத்தாய்திருக்குற்றால, மூர்த்திவிசேடந்தனையுமொழிதோறுநீயுரைத்த முறையார்க் கண்டேன்,வார்த்தைவிசேடங்கள்கற்ற மலைக்குறவஞ்சிக்கொடியே வருக்கைவாச, கீர்த்திவிசேடமும்பெரிய கிளைவிசேடத்தையுநீ கிளர்த்துவாயே.

குறத்தி-சொல்லுதல்.

இ-ம்-முகாரி-ஏக தாளம்.

கண்ணிகள்.

க. குற்றாலக்கிளைகளதைக்கூறக்கேளம்மா
குலம்பார்க்கில்தேவரிலும்பெரியகுலங்கண்டாய்
பெற்றதாய்தந்தைதனையுற்றுநீகேட்கில்
பெண்கொடுத்தமலையரசன்றனைக்கேட்கவேண்டும்;
உற்றதொருபனிமலையின்கொற்றவேந்தனுக்கும்
உயர்மதுரைமாறனுக்குஞ் செய்மருகர்கண்டாய்
வெற்றிபெரும்பாற்கடலிற் புற்றரவினுறங்கும்
வித்தவர்க்குக்கண்ணன மைத்துனர்தானம்மே.

உ. ஆனைவாகனத்தார்க்கும்வானுலகிலிருக்கும்
ஆருவாகனத்தார்க்குந்தோகைவாகனற்கும்
தானையாற்றந்தைகாலெறிந்தமகனுக்குந்
தருகாழிமகனுக்குந்தகப்பனுரைகண்டாய்
சேனைமகபதிவாசலானைபெறும்பிடிக்குந்
தேனீன்றமலைச்சாரல்மானீன்றகொடிக்குந்

கானமலர்மேலிருக்குமோனவயனார்க்குங்
காமனார்தமக் குமிவர்மாமனாரம்மே.

௩. பொன்னுலகிற்றேவருக்குமன்னுலகத்தவர்க்கும்
பூதலத்தின்முனிவருக்கும்பாதலத்துள்ளார்க்கும்
அன்னவடிவெடுத்தவர்க்குமேனவுருவானவற்கும்
அல்லார்க்குமுன்னுதித்தசெல்வர்காணம்மே
முன்னுதித்ததுவந்தவகைத் தமயனெனவுரைப்பார்
மொழிந்தாலுமொழியலாம்பழுதில்லைகாணம்மே
நன்னகரிகுற்றாலநாதர்கிளைவளத்தை
நானுரைப்பதரிதுலகுதானுரைக்கமம்மே.

வசந்தவல்லி-வினவுதல்.

விருத்தம்.

நீர்வளர்பவளமேனிநிமலர்குற்றாலநாதர்
கூர்வளம்பாடியாடுங்குறவஞ்சிகொடியேகேளாய்
கார்வளர்குழலார்க்கெல்லாங்கருதிநீவிருதாய்ச்சொல்லும்
சீர்வளர்குறியின்மார்க்கந்தெரியவேசெப்புவாயே.

குறத்தி-சொல்லுதல்.

தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வித்தாரமென்குறியம்மே-மணி

அநுபல்லவி.

முததாரம்பூணுமுகிழ்முலைப்பெண்ணே
வித்தாரமென்குறியம்மே.

சரணங்கள்.

க. வஞ்சிமலையொடு கொஞ்சி கொங்கு
மக்காரடங்துலுக்கணே மெச்சி
செஞ்சிவடகாசி நீளம் சீனஞ்
சிங்களமீழம் கொழம்புவங்காளம்
தஞ்சைசிராப்பள்ளிக் கோட்டை தமிழ்ச்
சங்கமதுரைதென் மங்கப்பேட்டை திசை
மிஞ்சிகுறிசொல்லிப் போராய் திசை
வென்றுதான்பெற்றவிருதுகள்பாராய் (வித்தார)

உ. நன்னகர்க்குற்றாலம்தன்னில் எங்கும்
நாட்டுமெண்ணூற்றெண்பத்தோராண்டுதன்னில்
பன்னகமாமுனி போற்றத் தமிழ்ப்
பாண்டியனுடுமுதற்சிற்றோடுமேந்த
தென்னாருஞ்சித்ர சபையை எங்க
சின்னஞ்சாதேவன்செப்போடுமேய்ந்த

முன்னாளில்குறி சொல்லிப் பெற்ற
மோகனமாலைபார்மோகன வல்லி (வித்தார)

௩. அன்பாய்வடகுண பாலில் சொல்லத்
தாண்டொசருகாதூற்றிருபத்து நாலில்
தென்காசிபாலய மோகக் குறி
செண்பகமாறற்குச்சொன்னபேர் நாங்கள்
நண்பாண்டியராச்சிய முய்ய சொக்க
நாயகர்வந்துமணக்கோலஞ் செய்ய
இன்பதுரைமீ னாட்சி அன்று
பெண்களைக்கேட்டதுஞ்சங்கத்தார் சாட்சி (வித்தார)

வசந்தவல்லி-குறிகேட்குதல்.

விருத்தம்.

கலிக்குவிழிவாள்கொண்டு காமனைவெஞ்சிகொள்வாய்
குலவித்தைகுறியேபாற் குறவஞ்சிகுறைவைப்பாயோ
பலவுக்குள்கனிபாய்கின்ற பாமர்குற்றாலநாட்டில்
இலவுக்குஞ்சிவந்தவாயா லெனக்கொருகுறிசொல்வாயே.

குறத்தி-சொல்லல்-இ-ம்- அடாணா-ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. என்னகுறிய கிலுநாஞ்சொல்லுவே னம்மே-சது
ரேறுவேனெதிர்த்தபேரைவெல்லுவே னம்மே

௨. மன்னியர்கள்மெச்சுங்குறவஞ்சிபா னம்மே-என்றன்
வாசிற்றுக்கித்தனைபோதங்கஞ்சிவா ரம்மே

௩. பின்னமின்றிக்கூழாளுலுங்கொண்டுவா வம்மே-வந்தால்
பெரியசுளைக்குடுக்கைமட்டுமுண்ணுவே னம்மே

௪. தின்னவிலையும்பிளவுமள்ளித்தா வம்மே-கப்பல்
சீனச்சாக்குந்துக்கிணிகிள்ளித்தா வம்மே

௫. அம்மேபம்மேசொல்லவாராய்வெள்ளச்சி வம்மே-உனக்
காக்கம்வருகுதுபாராய்வெள்ளச்சி யம்மே

௬. விம்முமுலைகன்னிசொன்னபேச்சுநன் றம்மே-நேரே
மேற்புரத்திலாந்தையிட்டவீச்சன்ன றம்மே

௭. தும்மலுங்காகமுமிடஞ்சொல்லுதே யம்மே-சரம்
சூட்சமாகப்பூரணத்தைவெல்லாதே யம்மே

௮. செம்மையிதுநன்னிமித்தங்கண்டுபா ரம்மே-திரி
கூடமலைத்தெய்வமுனக்குண்டுபா ரம்மே

### இதுவும்-குறத்திசொல்லுதல்.

### விருத்தம்.

பல்லியும்பலபலவென்னப் பகருந்திரிகூடத்திற்
கல்விமான்சிவப்பின்மிக்கான் கழு தின்மேன்மருவுமுள்ளான்
நல்லமோற்குலத்தானித்த நன்னகர்த்தலத்தனாக
வல்லியேயுனக்குநல்ல மாப்பிள்ளைவருவானம்மே.

### இதுவுங்-குறத்திசொல்லுவது.

### ஸ்ரீராகம் அடதாளசாப்பு.

### கண்ணிகள்.

க. தரைமெழுகுகோலமிட்டு முறை பெறவேகணபதியையம்மே-குட
தாங்காமுப்பழம்படைப்பாய்தேங்காயுமுடைத்துவைப்பாயம்மே
உ. அறுகுபுனல்விளக்கிடுவாபடைப்பாய் வெள்ளிலைகொடுவாயம்மே
வடைஅப்பம்வலர்க்கவரை யொப்பெபறிலையம்மே.

ந. நிறைநாழியளர்ந்து வைப்பாயிறையோனை கரங்குவிப்பாயம்மேகுறி
நிலவரத்தை தேர்ந்துகொள்வாய் குலதெய்வத்தைநேர்ந்து கொள்
வாயம்மே.

ச. குறிசொல்லவாகுறிசொல்லவாயினாறுதலேகுறிசொல்லவாவம்மே
ஐயர்-குறும்பறவர் திருவுளததார்பெரும்பலனுங் குறிசொல்லவாயம்
ஆனேருசெல்வர்திரி கூடநாதராணிநகர்வாழ் [மே
மானேவசந்தபசுங்கொடியே வந்தவேளைநன்றே
தானேயிருந்தலமுநன்றே செழுந்தாமரைப்போற்
காடென்றுகைம்மலர்காட்டாய் எனக்குறிகாட்டுதற்கே.

### இ-ம்-கல்யாணி-சாப்புதாளம்-கண்ணிகள்.

க. முத்திரைமோதிரமிட்டபையைக்காட்டாயம்மே
முனைகைமுதாரியிட்டகையைக்காட்டாயம்மே

உ. அஸ்தகடகம்பூணந்தகையைக்காட்டாய்-பொன்னி
னலங்காரநெளியிட்டகையைக்காட்டாய்

ந. சித்திரைச்சூடகமிட்டகையைக்காட்டாய்-பசுஞ்
செங்கைமலர்ததங்கரேகையைக்காட்டாய்

ச. சத்திபீடத்திரைவர்நன்னகர்க்குள்ளேவந்த
சஞ்சீவியேயுனதுகையைக்காட்டாய்

### கொச்சகக்கலிப்பா.

ஏழைப்பங்கர்செங்கைமழு வேற்றவராகுற்றாலர்வெற்பில்
வாழிகொண்டமோகவந்தவல்லியைப்பார்த்து
வாழிகொண்டுசெங்கனிவாய் மிக்கஉறவஞ்சிபழங்
கூழையுண்டவாயார் குறியைமீண்டுசொல்வாளோ.

## குறத்திசொல்லுதல்-இ-ம-பைரவி-ரூபகதாளம்.

### கண்ணிகள்.

க. மற்றுமவிருநிலத்தி லறம்வளர்க்குங்கையே
மனையறந்தாலறம்பெருக்கித் திறம்வளர்க்குங்கையே

உ. வீறுகநவநிதியம் விளையுமிந்தக்கையே
மேன்மேலும்பாலமுத மளையுமிந்தக்கையே

ங. ஆறுதசனக்கள்பசி யாற்றுமிந்தக்கையே
அணங்கனைபார்வணங்கிநிதம் போற்றுமிந்தக்கையே

ச. பேருகநன்னகரங் காக்குமிந்தக்கையே
புறவாதநெறிதார்க்கை! யேற்குமிந்தக்கையே

## குறத்திதெய்வம்பரவல்

### விருத்தம்.

கைக்குறிபார்க்கிலிந்தக் கைப்பிடிப்பவர்தாமெட்டுத்
திக்குமையுடையராவர் ஜெகமகராசிநீயே
இக்குறிபொய்யாதென்றே யீறையவர்திரிகூடத்தில்
மெய்க்குறவஞ்சிதெய்வம் விப்புறவணங்குவாளே.

### ஆசிரியப்பா.

குழல்மொழிபுதித்தார் குறும்பலவுடையார்
அழகுசந்நிதிவா ழம்பலவிநாயகர்
செந்தில்வாழ்முருகா செங்கண்மால்மருகா
கந்தனேயிலஞ்சிக் கடவுளேசரணம்
புள்ளிமானீன்ற பூவையேகுறக்குல
வள்ளிநாயகியே வந்தெனக்குதவாய்
அப்பனேமலை வாயலிலரசே
செப்பருமலைமேற் றெய்வகன்னியர்கள்
ஆரியங்காவா வருட்சொரிமுத்தே
நேரியகுளத்தூர் நின்றசேவகனே
கோலமாகாளி குற்றாலநங்காய்
காலவைரவாகன் றாடிசுறப்பா
முன்னடிமுருகா வன்னியாரையா
மன்னியபுலிம்பால் வரும்பன்றிமாடா
எக்காலதேவி துர்க்கைபிடாரி
யிக்கதோர்குறியாய் வேண்டினனுங்களை
வந்துமுன்னி நந்து வசந்தமோகினிப்பெண்
சிந்தையில்நினைத்தது சிவனோபொன்னோ
சலவையோபட்டோவசதானியமா
கலவையோபுபூகோ களபகஸ்தூரியோ

வட்டிலோசெம்போ வயிரமோமுத்தோ
கட்டிலோமெத்தையோ மண்டிவிராகனோ
வைப்படுசெப்போ வரதொடுசெலவோ
கைப்படுதிரவியங் களவுபோனதுவோ
மருவிலாப்பெண்மயில வந்திருஷ்டிதோஷமோ
திரிகண்ணராணவர் செய்தகைமயக்கமோ
மன்னர்காரிவள்மேல் மயல்சொல்லிவிட்டதோ
கன்னிதானொருவர்மேற் காமித்தகுறியோ
சேலையும்வளையுஞ் சிந்தினதியக்கமோ
மாலையுமணமும் வாரப்பெருங்குறியோ
இத்தனைகுறிகளி லிவள்குறியிதுவென்ன
வைத்தோர்குறியை வகுத்தருள்வீரே.

குறத்திசொல் விருத்தம்.

கடித்திடுமரவம்பூண்ட கருத்தர்குற்றாலர்நேசம்
பிடிக்குதுகருத் துகன்றாய்ப் பேசுதாசக்கிதேவி
துடிக்குதெண்ணுதடுநாவுஞ் சொலலென்றுவாயில்
இடிக்குதுகுறளியதமே யினிக்குறிசொல்லக்கேளே.

குறத்திசொல்லுதல்-இ-ம்-பிலஹரி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. சொல்லக்கேளாய்குறிசொல்லக்கேளாய் யம்மே
தோகையர்க்கரசேகுறி சொல்லக்கேளாய்

௨. முல்லைபூங்குழலாளே நன்னகரில்வாழ் முத்து
மோகனப்பசுங்கிளியே சொல்லக்கேளாய்

௩. பல்லக்கேறுங்கெருவி லானைநடத்திமணிப்
பணிபாபரணம்பூண்ட பார்த்திபன்வந்தான்

௪. செல்வப்பூங்கோலத்தையே நீகந்தடிக்கையிலவன்
சேனைகண்டவெருட்போலகாணுதேயம்மே

வசந்தவல்லிசொல்-இ-ம்-பந்துவராளி-த்ரளம்-திருபுடைதாளம்.

கண்ணிகள்.

௧. கன்னுநன்றுகுறவஞ்சிநடக்ககாரி இந்த
நாட்டானபேர்க்கானநானறியேனோ

௨. ஒன்றுகோடாதேகுறிசொல்லியேவந்தாய் பின்னை
யுழப்பிப்போட்டாயடிகுறியுங்குழப்பிப்போட்டாய்

௩. மன்றில்வருஞ்சேனைதன்னைக்கண்டுபயந்தால் இந்த
வையமுங்கிறுங்லுப்பைத்தையலர்க்குண்டோ

௪. இன்றவரையேகுளிருங்காய்ச்சலுண்டே-பின்னே
யென்றகுறிகண்டுசொல்லடி.

குறத்திசொல்லுதல்

கண்ணிகள்.

௧. வாகத்திலேறிவரும்யோகபுருஷன்-அவன்
வங்காரப்பவனிபார்ப்பெண்களுக்குள்ளே

௨. தோகைநீயவனைக்கண்டுமோகித்தாயம்மே-அது
சொல்லப்பயந்தேயிருந்தேன்சொல்வேன்முன்னே

௩. காகமணுகாததிரிகூடமலைக்கே-உன்மேல்
காய்ச்சலல்லகாய்ச்சலல்லகாமகாய்ச்சல்காண்

௪. மோகினியேயுன்னிபற்கிறுகிறுப்பெல்லாம்
மோகக்கிறுப்படிமோகனக்கள்ளி

வசந்தவல்லிசொல்லுதல்

கண்ணிகள்.

௧. கன்னியென்றுநானிருக்கநன்னகர்க்குள்ளே
காமியென்றாய்க்குறவஞ்சிவாய்மதியாமல்

௨. சன்னையாகச்சொன்னேன்குறிசாதிப்பையானால்-அவன்
தாருஞ்சொல்லிப்பேருஞ்சொல்லியூருஞ்சொல்லடி

குறத்திசொல்லுதல்.

கண்ணிகள்.

௧. உன்னைப்போலெனக்கவனறிமுகமோ
ஊரும்பேருஞ்சொல்வதுங்குறிமுகமோ

௨. பின்னையுந்தானுனக்காகச்சொல்லுவேனம்மே
பெண்சேரவல்லவன்காண்பெண்கட்கரசே

வசந்தவல்லிசொல்லுதல்.

கண்ணிகள்.

௧. வண்மையோவாய்மதமோவித்தைமதமோ-என்முன்
மதியாமல்பெண்சேரவல்லவனென்றாய்

௨. கண்மயக்காதேயுண்மைசொல்லடி
[illegible]மலைக்குறவஞ்சிக்கன்னிமயிலே

குறத்திசொல்லுதல்

கண்ணிகள்.

௧. பெண்ணரசேபெண்ணென்றால்திரியுமொக்கு-மொரு
பெண்ணுடனேசேரவென்றால்கூடவுமொக்கும்
திண்ணமாகவல்லவனாதனுமொக்கும்-பேணத்
திரிகூடநாதரென்றேசெப்பலாமம்மே.

கவிகூற்று.

மன்னர்திரிகூடநா ரென்னும்போதிலே-முகம்
மாணிக்கவசந்தவல்லிநாணிக்கவிழ்ந்தாள்

குறத்திசொல்லுதல்

கண்ணிகள்.

௧. நன்னகரிலீசருன்னைமேவவேவாரார்-இந்த
நாணமெல்லாம்நாளைநானுங்காணவேபோறேன்
௨. கைநொடியிற்பொன்னிதழிமாலைவிருச்சா-ணினி
கக்கத்திலிடுக்குவாயுன்வெட்கத்தையம்மே
௩. உன்னுமொருகுறவஞ்சிதன்னையழைத்தே-அரு
கிட்டுசருவாபரணம்பூட்டினாளே.

சிங்கன்வருதல்-விருத்தம்.

நாமாலைதிரிகூடப்ப மரருள்பெறவசந்தப்பாவைகூந்தப்
பூமாலையிதழிபெறப்பொன்மாலைமணிமாலைபொலிவாய்ப்பூண்டு
ஏமாலைக்குறவஞ்சிநன்னகர்பட்டணமுழுதும்நடக்குநாளில்
ராமாலைபூண்டசிங்கன்வணங்கச்சிங்கியைத்தேடிவருகின்றானே.

இதுவுமது-விருத்தம்.

வக்காவின்மணிபூண்டுகொக்கிறகுசிகைமுடித்துவரித்தோற்கச்சை
தொக்காகவரிந்திறுக்கித்தொடர்புலியைக்கண்டுறுக்கித்தூணிதூக்கிக்
கைக்கானவாயுதங்கள்கொண்டுசில்லிக்கோலெடுத்துக்கண்ணிசேர்
திக்கடங்காக்குளுவசிங்கன்குற்றாலத்திரிகூடச்சிங்கன்வந்தான்.

இதுவுமது-விருத்தம்.

வக்காவின்மணிசூடிவகைக்காரிசிங்கிவரும்வழியைத்தேடி
தூக்கானபுலிகரடிகிடுகிடெனநடுநடுங்கவெறிந்துநோக்கிக்
கக்காவென்றோலமிடுங்குருவிகொக்குக்கேற்றகண்ணிகையில்வாங்கி
தொக்காகநடைநடந்துதிரிகூடமலைக்குறவன்தோன்றினானே.

இராகம்-அடாணா-சாப்புதாளம்-கண்ணிகள்.

கொக்கிறகுசூடிக்கொண்டுகுருவிவேட்டையாடிக்கொண்டு
வக்காவின்மணிபூட்டிக்கொண்டுமடவார்கண்போலீட்டிக்கொண்டு

தொக்கால்கச்சையிறுக்கிக்கொண்டு துள்ளுமீசைமுறுக்கிக்கொண்டு
தக்கடங்காக்குளுவாங்கன் திரிகூடச்சிங்கன்வந்தான்

சிங்கன்சொல்லுதல்

விருத்தம்.

ஆளிபொற்பயந்தசுரும்பிசைகேட்குந் திரிகூடத்தவளர்நாட்டில், வேளைதொறும்புகுந்துதிரு விளையாட்டங்கண்ணிகுத்தி வேட்டையாடி, ஞாளிபோற்சுவடெடுத்துப் பூனைப்பாலொளிபோட்டு நரிபோற்பம்மிக், கூளிபோற்றொடர்ந்தடிக்குந் திரிகூடப்பெரியசிங்கக் குமரனானே.

இ-ம்-தன்னியாசி-ஆதிதாளம்-கண்ணிகள்.

௧. தெருக்கரியார்மூவரிற்றெரியார் சித்திரசபையார் சித்திரநதிசூழ் கோவிலிற்புறவில் காவலிலங்காக்குருவிகள்படுக்குங் குளுவனு நானே.

௨. காதஞ்செழுத்தாற்போத நீறணியார் கைக்கரம்பெருத்துக்கின்னரந் தொடுத்துப்யாகுகர்தோலால் பலவிதமடித்துப் பறவைகள்படுக்கும் குறவனும்நானே.

௩. தலைதனிற்பிறையார்பலவிளிலுறைவார் தாளிணைவணங்கார்சிலை தனைப்பிடித்தே பலமயிர்நறுக்கிச் சிலகண்ணுழுதுக்கிப் பறவைகள்படுக்குங் குளுவனும்நானே.

௪. ஒருகுழைச்சங்கம்ஒருகுழைச்சங்கம் உரியவிளோகர்திரிகூடநாதர் திருநடம்போற்றிதிருநீறுசாற்றி திரிகூடநாமச்சிங்கனும்நானே.

நூவன் வருதல்

விருத்தம்.

புலியோடுபுசியைத்தாங்கிப் போர்மதயானைசாய்க்கும்
வலியவர்திரிகூடத்தில் மதப்புலிச்சிங்கன்முன்னே
கலிகளுங்கதையும்பேசிநி கையிலேயிட்டிவாங்கி
எலிகளைத்துரத்தும்வீர நீப்புலிநூவன்வந்தான்.

இ-ம்-அடாணா-சாப்புதாளம்

கண்ணிகள்.

௧. ஊர்க்குருவிக்குக் கண்ணியுங்கொண்டு உள்ளான்படுத்தது மெண்ணிக்கொண்டு மார்க்கமெல்லாம்பலபேசிக்கொண்டு கோட்கார நூவனும்வந்தானே.

௨. கரிக்குருவிக்குக்கண்ணியுங்கொண்டு காணுங்கோழிக்குப்பொரியுங் கொண்டு வரிசிலைக்குளுவரிற்கவுண்டன் வாய்ப்பான்நூவனும்வந்தானே.

௩. ஏகனைகாகனைக்கத்திக்கொண்டு எலிபானைபுலியானையேவிக்கொண் டுவாகைசிங்கனைமேவிக்கொண்டுவங்கார நூவனும்வந்தானே.

௪. கொட்டகைத்தூண்போலக்காலிலங்க ஒட்டகம்போலேமேலிலங்க
கட்டானதிரிகூடச்சிங்கன்மாட்டிமாயனும்நானே.

சிங்கன் பட்சிகளைப்பார்த்தல்

விருத்தம்.

மூவகைமதிலுஞ்சாய மூரலால்வீரஞ்செய்த
சேவகர்திருக்குற்றாலர் திருவிளையாட்டந்தன்னில்
பாவகமாகதூவன பறவைபோற்பாவைகூவி
மாவினமேறிச்சிங்கன வரும்பட்சிபார்க்கின்றானே.

தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்

பல்லவி.

வருகினுமையே-பறவைகள்-வருகினுமையே

அநுபல்லவி.

வருகினுமையே திரிகூடநாயகர்
வாட்டமில்லாப்பண்ணைப்பாட்டப்புறவெல்லாம்
குருகுநாரையுமன்னமூந்தாராவும்
கூடைக்கிடக்கனுஞ்செங்காலநாரையும் வருகினு

சரணங்கள்.

௧. சென்னியிலேபுனற்கன்னியைவைத்த
திரிகூடநாதாகிரிமாதுவேட்டையில்
மன்னனொருவன்வரிசையிலேயானகங்கை
மங்கைக்குநானும்வரிசைசெயவேயன்ன
அன்னதயவுடையாகாசகங்கை
யடுக்களைக்காணப்புறப்படுநேத்திபோல்
பொன்னியவாணெக்குந்தன்னிறமாகப்
புரிந்துபுவனந்திரிந்துகுருகினம் வருகினு

௨. காடைவருகுதுகம்புள்வருகுது
காக்கைவருகுதுகொண்டலாத்தியும்
மாடப்புறாவுமயிலும்வருகுது
மற்றொருசாரியாய்க்கொக்குத்திரளெல்லாம்
கூடலையுள்ளாக்கிச்சைவம்புறம்பாக்கி
கூடுஞ்சகணரைநீடுங்கழுவேற்ற
ஏடெதிரேற்றியசம்பந்தமூர்த்திகள்
யிட்டதிருமுத்தின்பந்தருவந்தாற்போலே வருகினு

௩. வெள்ளைப்புறவுஞ்சகோரமுமாந்தையும்
மீன்கொத்திப்புள்ளுமரங்கொத்திப்பட்சியும்
கிள்ளையும்பஞ்சவர்னக்கிளிகூட்டமுங்
கேரளப்பட்சியும் காகணவாய்ச்சியும்

உள்ளானுஞ்சிட்டுவலியானுமன்றிலும்
ஓவஞ்செய்தேகூடிநாலேஞ்சுதோற்றமாம்
துள்ளாடுஞ்சூவகபாலர்பிராட்டியார்
தொட்டாடுமைவானப்பட்டாடைபோலவே. (வருகினு)

சிங்கன்சொல்.

ஈராயிரங்கரத்தானேற்றசங்குநான்மறையும்
சீராயிரங்கனஞ்செய்தவாகுற்றாலவெற்பில்
பாராய்பலமுகமும்பட்சிநிறைசாயுதையே
ஓராயிரமுகமும்பட்சிநிறைசாயுதையே.

தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

சாயினுமையே-பறவைகள்-சாயினுமையே.

அநுபல்லவி.

சாயினுமையேபாயும்பறவைகள்
சந்தனக்காட்டுக்குஞ்சண்பகக்காவுக்கும்
கோயிற்குழல்வாய்மொழிமங்கைபேருக்குங்
குற்றாலநாயகர்சிற்றாற்றுவெள்ளம்போல். (சாயி)

சரணங்கள்.

காராருஞ்செங்குளமேலப்பாடுபற்றுக்
காடுவெட்டிப்பற்றுநீடுசுண்டைப்பற்று
சீராரும்பேட்டைக்குளப்பேடைக்காங்கேயன்
ஸ்ரீகிருஷ்ணன்மேடுமுனிக்குருகன்பேரி
ஏரிவாய்சீவலப்பேரிவடகர்
யிராசகுலராமன்கண்டுகொண்டான்மேலே
மாரிப்பற்றுங்கீழைமாரிப்பற்றுஞ்சன்
னேரிபற்றுஞ்சாத்தனேரிப்பற்றுஞ்சுற்றி. (சாயினு)

பாறைகுளந்தெற்றுமேல்வழுதிக்குளம்
பாட்டைப்பெருங்குளஞ்செங்குறிஞ்சிக்குளம்
ஊருணிப்பற்றுந்திருப்பணிநீள
முயர்ந்தபுளியங்குளந்துவரைக்குளம்
மாறனேரிக்குளபளத்தளம்பாறை
வழிமறித்தான்குளமாலடிபற்றும்
ஆரணிகுற்றாலர்தோட்டச்செய்
அபிஷேகப்பேரிக்கணக்கன்பற்றிலுஞ் (சாயினும்)

டு

ஐயர்குற்றால,ந்தம்பியார்திருந்து
    டப்பாலொருதாதன்குற்றாலப்பேரி
செய்யும்புலியூரிலஞ்சிமேலாகரஞ்
    செங்கோட்டைகீவல்நல்லூர்சிற்றம்பலம்
துய்யகுன்றக்குடிவாழவல்லானகுடி
    சுரண்டயூர்முதலுட்கிடைசுற்றியே
கொய்யமலர்த்தாரிலஞ்சிக்குமர
    குருவிளையாடுந்திருவிளையாட்டத்தில்..

சிங்கன்சொல்

கொச்சகக்கலிப்பா.

கொட்டழகுகூத்துடையார்குற்றாலநாதர்வெற்பில்
நெட்டழகுவாள்விழியும்நெற்றியின்மேற்கஸ்தூரிப்
பொட்டழகுப்கரத்தழகும்பொன்னழகுமாய்நடந்த
கட்டழகிதன்னழகெனகண்ணளவுங்கொள்ளாதே.

தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

மேயினுமையே-பலவைகள்-மேயினுமையே

அநுபல்லவி.

மேயினுமையே குற்றாலநாதர்வியன்குல சேகரப்படிக்குளங்களும்ஆயிரப்பேரியுந்தென்காசியுஞ்சுற்றிய பிரையுந்தேளியுமாராலுங்கொத்தியே. (மேயினு)

சரணங்கள்.

க. ஆலஞ்சூழ்த்திருப்பணியுங்கட்டி யன்னசத்திரங்கட்டியப்பாலுந்தென்காசிப், பாலமுதங்கட்டிப்படித்தரஞ்சேர்கட்டி பத்தசனங்களைக்காக்கத்துசங்கட்டி, மாலயன்போற்றியகுற்றாலநாதர்க்கு வழித்தொண்டுசெய்திடக்கச்சைகட்டிக்கொண்ள், சீலன்கிளுவையில்சின்னஞ்சேத்திரன்சிறுகாலசந்திதிருத்துப்புறவெல்லாம் (மேயினு)

உ. தானைத்தலைவன்வயித்தியப்பலன்பெற்ற சைவக்கொழுந்துதருமத்துகாலயஞ், சேனைச்சவரிப்பெருமாள்சகோதரன் செல்வன்மருதூர்வயித்தியப்பனுடன்மானவன் குற்றாலநாதனைப்பெற்றவன் வள்ளலெனும்பிச்சைப்பிள்ளைத்திருத்தெல்லாங் கானக்குளத்துள்வாய்கீழைப்புதுக்குளங்கற்பூரக்காற்பற்றுந்தட்டான்குளஞ்சுற்றும் (மேயினும்)

ந. மன்னன்கிளுவையிற் சின்னணஞ்சேந்தின் வடகரைவீட்டுக்குமந்திரியாகவும் செந்நெல்மருதூர்க்குநாயகமாகவுந் தென்காசியூருக்குத்தாயகமாகவும் தன்னைவளர்க்கின்றகுற்றாலத்தந்தாதி சொன்னவன்நண்ணார்தொழும்பிச்சைப்பிள்ளைத்திருத்தெல்லாம் (மேயினும்)

ச. நன்னகரூர்கட்டிச்சாலைமடங்கட்டி நாயகர்கோவிற் கொலுமண்டபங்கட்டி, தென்னமரம்பரமாணந்தத்தோப்பிட்டுத் தெப்பக்குளங்கட்

டித் தேர்மண்டபங்கட்டிப்பன்னுந்திரிகூடத் தம்பங்கட்டிப் பசுப்பிரை கோடித்திருப்பணியுங்கட்டியங்நாளில் தர்மக்களஞ்சியுங்கட்டி மனந்தப த்மநாபன் கட்டளைப்பற்றெல்லாம். (மேயினு)

ரு-தந்தைமுன்கட்டினவம்பலத்துக்குந் தன்மத்துக்கும்நிலைக்கண்ணாடி போலவே எந்தையார்வாசலிற் பிள்ளையார்செய்வித்திரண்டுகுறிஞ்சிப் படித்துறையுஞ்செய்தகொந்தார்புயத்தானிராக்கதப்பெருமாள் குற்று லநாதன்முன்னுற்ற கோசன்வந்தணைசேர்சங்கு முத்துதன்மைத்துன ன் மன்னன்வயித்தியநாதன் திருத்தெல்லாம். (மேயினு)

சு-ஆர்மேல்வருகின்றதுன்பமுநீக்கி யடங்கார்குறும்புறடக்கியேதென் காசியூர்மேலுயர்ந்தமனுநீதிநாட்டி யுடையவர்குற்றாலர் பூசைநைவே த்தியம்தேர்மேற்றுகாளுந்தெப் பற்றிநாளுஞ் சித்திரமண்டபஞ்சத்தி ரச்சாலையும் பார்மேல்வளசெய்யனந்தபத்மநாபன் பாலன்வயித்தியநா தன் திருத்தெல்லாம். (மேயினு)

எ-ஆறையழகன்கப்பபூபாலன் கட்டளையன்பன் திருமலைக்கொழுந்து தன்கட்டளை, காரம்புகுற்றாலச்சங்குகன கட்டளைகங்களெல்லாரரிநா பாலன்கட்டளை வீறுசேர்பால்வண்ணச் சங்குவங்கட்டளை மிக்காண வோவனுக்கிருஷ்ணன்வணிகேசன் பேருடையன்பன்வருசங்குமுத்து தன்பேரானகட்டளைச் சீரானபற்றெல்லாம். (மேயினு)

அ-தானிகன்சர்க்கரைப்பண்டாரமென்னுந்தணியாதகாதற்பணிவிடை செய்கின்ற மேன்மைபெருஞ்சுந்தரதோழன்கட்டளைமிக்க கருவைப் பதியாம்நாயகன் நானிலமும்புகழ்தாகந்தீர்த்தானுடன் வல்லூர்வருஞ் சங்காரமூர்த்திகட்டளை ஆனசடைத்தம்பிரான் பிச்சைகட்டளையப்பா ல்மலைநாட்டார் கட்டளைப்பெற்றெல்லாம். (மேயினு)

சிங்கன்சொல்-கொச்சகக் கலிப்பா.

செட்டிக்கிரங்கிவினைதீர்த்தவர்குற்றாலர்வெற்பிற்
சுட்டிக்கிணங்குநுதற்சுந்தரியாள்கொங்கையின்
முட்டிக்கிடந்துகொஞ்சிமுடித்தாடிகூடிநன்றாய்க்
கட்டிக்கிடக்குமுலைக்கச்சாய்க்கிடந்திலனே.

தரு-இ-ம்-கல்யாணி-தாளம்-சாப்பு.

பல்லவி.

கண்ணிகொண்டுவாடாகுளுவாகண்ணிகொண்டுவாடா

அநுபல்லவி.

கண்ணிகொண்டுவாடாபண்ணவர்குற்றாலர்
காரார்திரிகூடச்சாரலிலேவந்து
பண்ணியபுண்ணியமேறினாற்போலே
பறவைகளெல்லாம்பறந்தேதிரியுது (கண்ணி)

சரணங்கள்.

மானவர்சூழுமதுரையிற்பாண்டியன்
மந்திரியார்கையின்முந்திப்பணம்போட்டுத்

தானுசைபட்டுமுன்கொண்டுகொக்கெல்லார்
    தரிகொண்டதில்லைநரிகொண்டுபோச்சுது
கானவர்வேடத்தையீனமென்றெண்ணாதே
    காக்கைப்படுத்தகருமுகில்வண்ணனும்
மேனாட்படுத்திட்டகொக்கிதின்னும்
    விடைமேலிருப்பார்சண்டைமேலிருக்கிறது (கண்ணி)

முன்னாள்படுத்தபழம்பெருச்சாளியை
    மூத்தநயினார்மொடுவாய்க்கொடுபோனார்
பின்னானதம்பியாரானுடுமயிலையும்
    பிள்ளைக்குறும்பாற்பிடித்துக்கொண்டேகினர்
பன்னாருமன்னத்தைநன்னகரீசர்
    பரிகலமீந்திடும்பார்ப்பானுக்கீந்தனர்
வன்னப்பருந்தொவிகள்வன்கொடுபோனார்
    வக்காவுநாரையுங்கொக்கும்படுக்கவே. (கண்ணி)

மீறுமிலஞ்சிக்குறத்தியைக்கொண்டசெவ்
    வேட்குறவன்முதல்வேட்டைக்குப்போனநாள்
ஆறுநாட்கூடிபொருகொக்குபட்ட
    தகப்பட்டகொக்கையவித்தொருசட்டியில்
சாறுகைபித்தபின்வேதபிரமனார்
    தாமுட்கொண்டார்சைவர்தாமுங்கொண்டவர்தவப்
பேறுமுனிவருமேற்றுகொண்டாரினிப்
    பிக்குச்சொல்லாமலேகொக்குப்படுக்கவே. (கண்ணி)

கவிக்கூற்று-கொச்சகக்கலிப்பா.

ஆனைகுத்திச்சாய்த்ததிறலாளர்திருக்குற்றாலர்
கூனிகொத்திமுக்கிவிக்கிக்கொக்கிருக்கும்பண்ணையெல்லாம்
சேனைபெற்றவாட்காரச்சிங்கனுக்குக்கண்ணிகொண்டு
பூனைக்குததிநாவன்முழுப் பூனையைப்போல்வந்தானே.

தூதுவன்-சொல்லுதல்.

இர்ாகம்-காம்போதி-சாப்புதாளம்.

கலந்தகண்ணியைநெருக்கிக்குத்தினால்காக்காயும்படுமே குளுவா
    காக்காயும்படுமே

மலர்ந்தகண்ணியைக்கவிழ்த்துக்குத்தினால்வக்காவும்படுமே குளுவா
    வக்காயும்படுமே

உலர்ந்தகண்ணியையிறுக்கிக்குத்தின ஆுள்ளானும்படுமே குளுவா
    உள்ளானும்படுமே

குலந்தகண்ணியைத்திருத்திக்குத்தடாகுற்றாலமலைமேல் குளுவா
    குற்றாலமலைமேல்.

### சிங்கன்சொல் கொச்சகக்கலிப்பா.

கள்ளுலவுகொன்றையந்தார்கர்த்தர்திரிகூடவெற்பில்
பிள்ளைமதிவாணுதலால் பேசாகவீறங்கித்
துள்ளிமடிமேலிருந்து தோளின்மேலேறியவள்
கிள்ளைமொழிகேட்கவொரு கிள்ளையானேனில்லையே.

### தரு-இ-ம்-கல்யாணி ஆதிதாளம்.

பல்லவி.

கொம்பாறடையே-பொறு பொறு-கொம்பாரடையே

அநுபல்லவி.

கொம்பாரடையே நம்பர்குற்றாலர்
இருபைப்புறவில் பறவைபடுக்கவே
வம்பாகவந்தவுன் சத்தத்தைகேட்டல்லோ!
வந்தகுருவிகலைந் தோடிப்போகுது (கொம்பா)

சரணங்கள்.

ஏறுகமீன்களு மேறிவருகுது
எத்திசைப்பட்ட குருகும்வருகுது
நூறுருகண்ணியைப் பெருக்கக்குத்தியே
நூவனுதானு மிருந்தோமுனங்கினி,
பேறுனகூலை மருந்தாகிலும்பிறர்
பேசாமல்வாடைப் பொடியாகிலும்வரக்
கூறுகிலுமொரு பங்காகிலுமொரு
கொக்காகிலும்நரிக் கொம்பாகிலுந்தாரேன் (கொம்பா)

பூசியுடுத்து முடித்துவளையிட்டுப்
பொட்டிட்டுமையிட்டு பொன்னிட்டுபூவிட்டுக்
காசுபறித்திடும் வேசையராசாரக்
கண்ணிக்குள்ளே படுங்காமுகர்போலவும்
ஆசாரவீனத் துலுக்கன்குதிரை
யடியொட்டுப்பாறை யடியொட்டினார்போலுங்
தேசத்துக்கொக்கெல்லாங் கண்ணிக்குள்ளேவந்து
சிக்குதுபார்கறி தக்குதுபாரினிக் (கொம்பா)

ஆலாவுங்கொக்குமருகேவருகுது
ஆசாரக்கள்ளர்போல்நாளாதிரிகுது
வேலானகன்னியராசையினுக்கீழு
மேலுந்திரிந்துத் திரிந்தெங்கள்
காலால்திரிந்துத் திரிந்தெங்கள்
கண்ணிக்குள்ளாகும்பறவையைப்போகட்டும்
பாலாறுநெய்யாறுபாய்கின்றவோட்டத்திற்
பல்லெல்லாடிக்கச்சிறு கல்லகப்பட்டார்போல் (கொம்பா)

## கவிக்கூற்று.

### ஆசிரியவிருத்தம்.

தேவிகுழல்வாய்மொழிப்பேர்காச்சியர்கால் செண்பகக்கால்திருக் தமதிசூடினார்கால், காவியல்பிவணமடைத்தட்டான்பற்றுக்களிக்குளம ழகாபள்ளன்கூற்று, வாவிதொருநின் றுசிங்கம்வேட்டையாடிவருவியா ற்றுக்கால்வடக்கால்தென்கால், கோவில்விளையாட்டமெங்குங்கண்ணி குத்திக் கூவினாநூவனைவிட்டேவினானே.

### சிங்கம்-சொல்லுதல்.

இ-ம்-தர்பார்-சாப்புதாளம்.

கண்ணிகள்.

கல்வித்தமிழ்க்குறிபார்திரிகூடநாதர்கர்த்தர்பெற்றுள்ராவுஞ்
செல்வக்கடலணயான்குற்றாலகசிவராமநம்பியெங்கோன்
வல்லமணியபட்டன்பெருமைவளர்ச்சங்குமுத்துநம்பி
வெள்ளுங்குற்றாலநம்பி புரவெல்லர்ம்மீன்கொத்திக்கூடாமையே
சீராளன்பிச்சபிள்ளைதிருப்பணிசெல்வம்புதுக்குளமும்
காராளன்சங்குமுத்து திருத்தொடைக்காகயென்கட்டளையும்
மாராஜன்தென்குடிசைவைத்தநாவன்புதுக்குளமும்
தாராளமானபுள்ளும் வெள்ளன்னமுந்தாராவுமேயுதையே
மானக்கணக்குடனே ஸ்ரீ பண்டாரந்தன்மபத்தாகணக்குமத
வானவர்குற்றாலர்திருவாசம்மாடநற்பத்தியமும்
நானிகழ்சூழ்குடிசைவைத்தியநாதன்
தானபமானம்வந்தாசிவமாரன்சம்பிரதிகணக்கும்
வேதகாராயணவேலகுமாரன்விமைத்தொண்டநபுடாளன்
சீதரன்முத்துமன்னன்விசாரிப்புச்சேர்ந்தபுரவியெல்லாம்
காதலாய்க்கண்ணிவைத்துபறவைக்குக்கங்கணங்கட்டிநின்றே
னேதோவொருபறவைதொடர்ந்துவநதென்னைக்கடிக்குதையோ.

### சிங்கன் சிங்கியை நினைத்துக்கொள்ளுதல் விருத்தம்.

காவலர்திரிகூடத்திற் காதலாற்கலங்கிவந்த
நூவனைப்பழித்துச்சிங்க னோக்கியேவேட்டைகாட்டி
லாவல்சேர்காமவேட்டை யாசையாலன்னப்போட்டைச்
சேவல்போய்புணரக்கண்டான் சிங்கமேற்பிறமைகொண்டான்.

### சிங்கியை-நினைத்துப் புலம்பல்.

இ-ம்-ஆகிரிசாப்புதாளம்.

எட்டுக்குரலிட்டுகுரலிலொருகுரல்கூவும் புறுவேயென
தேகாந்தச்சிங்கியைகூவாவதெனன குலரேவ
மட்டார்குழலிதன்சாயலைக்காட்டு மயூரமேயவள்
மார்பிலேமுந்தமுலையையுங்காட்டுப • சாரமே

கட்டொத்தகும்பத்தடமுலைகாட்டுஞ் சகோரமே சற்றுந்
தண்ணென்றும்வெச்சென்றுங்காட்டிவிட்டாலுபாரமே
கட்டிதிரவியங்கண்போலுநன்னகர்க் காகாரமே
கண்டிடமெல்லாமவளாகத்தோற்றுது காவியேகண்ணிற்

சிங்கன்சொல்-கொச்சகக்கலிப்பா.

செட்டிபத்திற்கண்ணிவைத்தேன்சிங்கிநடைச்சாயலினாற்
பெட்டைகுளத்திலன்னப்பேட்டைநடைபார்த்திருந்தேன்
கட்டுற்றநன்னகர்க்கென் கண்ணியெல்லாங்கொற்றிவெற்றிக்
கொட்டிகொண்டையேகுருவியெல்லாம்போயினுமே.

தரு-இ-ம்-முகாரி-சாப்புதாளம்.

பல்லவி.

போயினுமையேபறவைகள்போயினுமையே.

அநுபல்லவி.

போயினுமையே நாயகர்குற்றாலர்
பொல்லாததக்கன்மதத்தையழித்தநாள்
வாயிலடிபட்டிடிபட்டுதைபட்டு
வானவர்தானவர்போனதுபோலவே. போயினு

சரணங்கள்.

மேடையினின்றொருபஞ்சவர்ணக்கிளி
மின்னார்கைதப்பியென்முன்னாகவந்தது
பேடையென்றேயதைச்சேவல்தொடர்ந்தது
பின்னொருசேவலுங்கூடத்தொடர்ந்தது
கூடியவின்பமிரண்டுக்குமெட்டாச்
சுந்தோபசுந்தரர்வந்தகலாபத்திற்
காடெல்லாம்பட்டாய்க்கூடியுளம்பாடிக்
கண்ணியுந்தட்டியென்கன்னிலும்அடியே. போயி

ஆயிரங்கொக்குக்கண்ணியை வைத்தநா
ளப்பாலேபோயொருமிப்பாயிருக்கையில்
ஆயிரங்காசுக்களாயிரம்பட்டு
மறைத்துவிரைத்துக்கிறப்பதுபோலவே
காயமொடுங்கிக்கிடந்ததுகண்டுநான்
கண்ணிகழற்றிநிலத்திலேவைத்தபின்
சேயிழைதன்பொருட்டாரேபஞ்சாட்சரம்
சேவித்தமன்னவன்பாவம்போனாற்போலே. போயி

தம்பமென்றேதம்பிகூறுரைச்சதிபண்ணித்
தான்வாழ்பார்ப்பவர்செல்வங்கள்போலவும்
பம்பம்வடபாலருவியிற்றோய்ந்தவர்
பாவங்கள்நீராய்ப்போவதுபோலவும்

கும்பமுனிக்குச்சிவமானகாலங்
குதித்தோடிப்போனவைணவர்போலவும்
அம்பிகைபாதந்திரிகூடநாத
ரடியவர்மேல்வந்ததுன்பம்போனாற்போலே. போயினு

நூவன்-சிங்கனைப்பழித்தல்.

விருத்தம்.

வருக்கையார்திரிகூடத்தின்மாமிமேற்கையும்
பருத்திமேற்கண்ணுமானவைபோல்வேட்டைபோனாய்
கருததுவேறானாய்தாயைகற்பித்தமகள்போலென்னைச்
சிரித்தனைசிங்காவுன்னைச்சிரித்ததுகாமம்போமே.

இதுவும்-நூவன்சொல்-விருத்தம்.

கடுக்கையார்திரிகூடத்திற்காமத்தால்வாமக்கள்ளைக்
குடித்தவர்போலேவீழ்ந்தாய்கொக்குநீபடுத்துவாழ்ந்தாயே
அடிக்கொருநினைவேன்சிங்காவாசைப்பேயுனைவிடாது
செடிக்கொருவலையும்போட்டுச்சிங்கியைத்தேடுவோம்.

சிங்கன்-நூவனுக்குச்சொல்லுதல்.

விருத்தம்.

வேடுவர்கள்ளியோர்நாண்மெய்யில்மாதவனேயென்னை
யூடலிற்சொன்னபேச்சா லுறவியிலிபதைத்தாளென்பார்
போடுவான்புட்பபாணம்புறப்படமாட்டேநூவா
சேடநீதிரிகூடத்திற்சிங்கியைத்தேடுவாயே.

நூவன்சொல் விருத்தம்.

அங்கணர்திரிகூடத்தி லவளைநீயணிந்தாலென்ன
தங்களிற்பிறந்தாலென்ன நுறுவிலிபகைத்தானென்பார்
கங்கணமெனக்கேன்சிங்கா காசிலையுனக்குண்டானாற்
கொங்கணச்சிங்கிதன்னை கூட்டிவாகாட்டுவேனே.

தலங்கள்தேடிப்போன

விருத்தம்.

திருவண்ணாமலைகாஞ்சிதிருக்காளத்தி சீர்காழிசிதம்பரந்தென்னாரூர்காசி, குருநாடுகோவாரங் கோலகொண்டைகோகரணஞ்ஜெகநாதங்கும்பகோணம் அரியலூசீரசத்திருவானைக்காவடங்கலும் போய்ச் சிங்கிதனைத்தேடிச்சிங்கன், வருசிராப்பள்ளிவிட்டு மதுரைதேடி மகிமைகொண்டான்றிரிகூடமெதிர்கொண்டானே.

வில்லிபுத்தூர்கருவைநல்லூர்புன்னைக் காவுதேள்திருச்செந்தூர்குருகூர்ஸ்ரீவைகுந்தநல்வேலி சிங்கிகுளந்தேவநல்லூர் நிலைதருசிற்றூர்

குமரிதிருவாங்கோடு சொல்லரியகுருங்கைகளக்காடுதேடித் தோன் மருத்தூர்த்தாழநல்லூர்தேடிச் செல்வருறைசிவசைலம் பாவநாசந் திரிகூடற்சிங்கிதனைத்தேடுவானே.

சிங்கன்-சொல்லுதல்.

இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்

கண்ணிகள்.

க. பேடைக்குயிலுக்குக் கண்ணியைவைத்துநான் மாடப்புருவுக் குப்போனேன், மாடப்புருவுங்குயிலும்படுத்தேன் வேடிக்கைச்சிங் கியைக்காணேன்.

உ. கோலமயிலுக்குக்கண்ணியைவைத்து நானுலாப்படுக்கவேபோ னேன், ஆலாவுங்கோலமயிலும்படுத்தேன்மாலானசிங்கியைகாணேன்

ந. வவ்வாற்பறவையின்வேட்டைக்குப்போய்க் காமவெவ்வேட்டை தப்பிவிட்டேன், வவ்வாஸ்படுக்கமறநாயகப்பட்ட வைபோகமாச்சு துதானே.

ச. இவ்வாறுவந்தவென் நெஞ்சில்விகாரத்தை யெவ்வாறுதீர்த்துக் கொள்வேனே, செவ்வாய்க்கரும்பை யறுகர்வஞ்சியை சிங்கியைக்கா ண்கிலேனே.

குற்றாலத்தில்-சிங்கன்-சிங்கியைத்தேடுதல்.

விருத்தம்.

நற்றாலந்தன்னிலுள்ளோர்யாவரேனு நன்னகரத்தலத்தில்வந்து பெறுவார்பேறு, பெற்றார்தானன்னகரதலத்தைவிட்டாற் பிரமலோ கம்வரைக்கும்பேறுண்டாமோ, வற்றாதவடிவருவிச்சாரநீங்கி வடகா சிகுமரிமட்டு மலைந்தசிங்கன், குற்றாலத்தலத்தின்முன்னே தவத்தால் வந்து கூடினான்சிங்கிதனைத்தேடினானே.

சிங்கியைக்காணமற்புலம்பல்.

தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

சிங்கியைக்காணேன் என்வங்கணச் சிங்கியைக்காணேனே.

அநுபல்லவி.

சிங்கியைக்காமப்பசுங்கிளிப்பேடையைச்
சீர்வளர்குற்றாலர்பேர்வளம்பாடிய
சங்கீதவாரியையிங்கிதநாரியைச்
சல்லாபக்காரியையுல்லாசமோகன சிங்கியை

சரணங்கள்.

க. ஆரத்தனத்தைப் படங்கொண்டுமூடி யசைந்துநின்றாளதையா னைக்கொம்பென்றே கோரத்தைவைத்த விழிக்கெதிர்சென்றே ன்கொஞ்சத்தனத்தை யறிந்துசுகக்காறி பாரத்தனத்தைத்தி

றந்துவிட்டாள்கண்டு பாவியேனாவி மறந்துவிட்டேனுடன் தீர
க்கனியையமயக்கிழுபக்கியே சிங்காரமோகனச் சிங்கிகொண்டா
ளந்த. சிங்கி

௨. பூவென்றபாதம்வருடிவருடிப் புளகமுலையை நெருடிநெருடி
யேவென்ற கண்ணுக்கோரஞ்சனந்தீட்டி யெடுத்துச்சுருளையித
ழாலிடுக்குவள் வாவென்றுகைச்சுருள் தானென்றுநானுவக்கு
க்குறிகண்டு நகக்குறிவைத்தபின் னுவென்றெருக்காலுமுறைப்
பனதுக்கிடந்துகொதிக்குதென்பேய்மனம். சிங்கி

௩. தாராடுக்குன்றீ வடத்தைபொதுக்கித் தடமார்பிறுகத்தழுவவ
ந்தாலவள்-வாராடுங்கொங்கைக்குச் சந்தனம்பூசா மறுத்துநா
ன்பூசினும் பூசலாகாதென்பாள், சீராடிக்கூடிவிளையாடியிப்படி
தீராமையல்தந்த தீராண்மைக்காரியைக், காராடுகண்டர்தென்
னாட்டுறைகாரிகைப்பூவையைப் பாரியப்பாவையைச் சிங்கி

நூவன்-வினவுதல்.

கொச்சகக்கலிப்பா.

சங்கமெல்லாமுத்தீனுஞ் சங்கர்திரிகூடவெற்பி
பொங்கமெல்லாஞ்செய்யுமுங்கள் பொங்கமெல்லாம்யாரறிவார்
சிங்கமெல்லாமொத்ததுடிச் சிங்காவுன்சிங்கிதனக்
கங்கமெல்லால்லாஞ்சொல்லி யடையாளஞ்சொல்வாயே.

தரு-இ-ம்-பியாகடை-மீசுரதாளம்

பல்லவி.

கறுப்பிலழகியடா-காமச்

அநுபல்லவி.

சுறுக்கிலழகிசிங்கி சுகக்காறி கறுப்பி

சரணங்கள்.

௧. கண்களிரண்டும்அம்புக் கணைபோல்நீண்டிருக்கும்
 கையத்தனைபகலங்கானுமடா
பெண்கள்மயக்குமவள் விரகம்பார்வை
 சிங்கிபிடித்தாலந்தப் பயலும்பெலப்பானோ. கறுப்பி

௨. நகையுமுகமுமவள் நாணயக்கைவீச்சும்
 பகைவரும்பிரிந்துபார்ப்பாரடா
தொகையாச்சொன்னேனினிச் சொல்லக்கூடாதொரு
 வகையாய்வருகுதென்னைமயக்குதையேஐயே. கறுப்பி

௩. விடையில்வரும்பவனி யுடையர்திருக்குற்றாலர்
 சடையிலிளம்பிறைபோல் தனிநுதலாள்
சடையிலழகுமிரு குடையிலழகுமவ
 ளுடையிலழகுமென்னை யுருக்குதையேஐயே. கறுப்பி

கொச்சகக்கலிப்பா.

சாட்டிநிற்குமண்டமெல்லாஞ் சாட்டியில்லாப்பம்பரம்போ
லாட்டிவிக்குங்குற்ருலத் தண்ணலார்நன்ஞட்டில்
காட்டுவிக்குமுன்மோகக் கண்மாயச்சிங்கிதனைக்
கூட்டிவைக்கும்பேர்களுக்குக் கூலியென்னசொல்வாயே.

இராகம்-தர்பார்-ரூபகதாளம்.

கண்ணிகள்.

க.வாடைமருந்துப்பொடியும் அம்மியூர்
மரப்பாவைபின்தொடரமாயப்பொடியும்
உ.கூடியிருக்கமருந்தும் இருபொழுதும்
கூடியிருப்பார்களைகலைக்கமருந்தும்
ந.காடுகட்டக்கினிக்கட்டு குறளிவித்தை
கண்கட்டுவித்தைகளுங்காட்டித்தருவேன்
ச.வேடிக்கைக்காமரதிபோல் திரிகூட
வெற்பிலுறைசிங்கிதனைக்காட்டாயையே
ரு.மலையைக்கரையைப்பண்ணுவேன் குமரிகட்ரு
வாராதமுலைகளும் வரப்பண்ணுவேன்
சு.முலையையொளிக்கப்பண்ணுவேன் ஒளித்தபேரை
மோகினிமந்திரஞ்சொல்லிவரப்பண்ணுவேன்
எ.திலதசிரகஞ்செய்வேன் ஒருவருக்குந்
தெரியாமற்போகவரச்சித்துமறிவேன்
அ.கலகமதனப்பயலை யென்மீதிற்கண்
காட்டிவிட்டசிங்கிதனைக்காட்டாயையே.

நூவன்-சொல்லுதல்.

கொச்சகக்கலிப்பா.

ஆற்றைநான்கடத்திவிட்டா லாகாசமார்க்கமோடத்
தேற்றநீயறிவாயல்லோ திரிகூடமலையிற்சிங்கா
சாற்றுமுன்மருந்துபோலச் சகலர்க்குங்குறிகள்சொல்லிய
போற்றுமுன்சிங்கிபோன புதுத்தெருவிதுகண்ணாயே.

சிங்கன்-சிங்கியைக்காணுமல்-வருந்துதல்

தரு-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

எங்கேதான்போனுளையே-என்சிங்கியிப்போ
எங்கேதான்போனுளையே

அநுபல்லவி.

கங்காளர்திரிகூடகர்த்தர்திருநாடுதனில் எங்கே

சரணங்கள்.

க. வேரளகிலுமயக்குவள்-வலியதட்டில்
கேளாமலுமுயக்குவள்
ஆளாயழகனுமாயாரையெங்கேகண்டாளோ
தேளாசைக்காரிசிங்கிசும்மாகிடக்கமாட்டாள் எங்கே

உ. மெய்க்குறியாலெங்கும்வெல்லுவள் மனக்குறியுங்
கைக்குறியுங்கண்டுசொல்லுவள்
திக்கிலடங்காதகுறியிக்குளடங்காதுமொழி
மைக்குளடங்காதுவிழிகைக்குளடங்காதகள்ளி எங்கே

ந. சித்திரச்சபேசர்மேலே-சிவசமயப்
பத்தியில்லாப்பெயர்போலே
குத்தியிலாக்குங்கள்ளுங்குவேயிற்றென்னங்கள்ளும்
அத்தனையுங்குடித்துப்போட்டார்பிறகேதொடர்ந்தாளோ

சிங்கியெதிர்ப்படுதல்

விருத்தம்.

சீதம்புனைந்தகுற்றாலநாதர் திருநாட்டிலிருவருந் தான்கண்ட காதலெனுங்கடல்பெருகித் தரிகொள்ளாமற்கைகலக்கும்போது தேவலைகுறுக்கிட்டாற்போல், வீதிவந்துகுறுக்கிடவேநாணம்பூண்ட விண்ணணச்சிங்கினைக் கண்டுசிங்கன், தூதுவந்தநளனைன்கன்னி மாடந் துலங்குதமயந்தியெனத்தோன்றினனே.

தரு-இ-ம்-எ துகுலகாம்போதி-சாப்புதாளம்

பல்லவி.

இங்கேவாராய்-என்கண்ணே-இங்கேவாராய்

அநுபல்லவி.

இங்கேவாராய்மலர்ச்செங்கைதாராய்மோகச்-சங்கைபாராய்
காமச்-சிங்கியாரேயிப்போ இங்கே

சரணங்கள்.

க. பாதம்நோமே நொந்தால்மனம்-பேதமாமே
பாதம்நோகநிற்பதேது பாவமினிகூதலோ கொடிது காதலோகடினம்

உ. பாவிதானே-மதன்கணை ஏவினனே
காவில்மாங்குயில்கள் கூவிக்கூவியென தாவிசோருதன்னை யாவி
யாவிகட்ட இங்கே

ந. வருக்கைமூலர் வடவருவித் திருக்குற்றாலர்
பெருக்கம்பாடிகொள்ள மருக்கள் சூடிக்கொள்ள ஒருக்காலாடிக்
கொள்ள இருகால்கூடிக்கொள்ள இங்கே

### சிங்கன் சிங்கியைக்கண்டு மகிழ்தல்.

#### கொச்சகக்கலிப்பா.

தெண்டாடுஞ்சுந்தரற்குத் தோழர்திரிகூடவெற்பிற்
றிண்டாடும்நின் றசிங்கன்சீராடுஞ்சிங்கிதனைக்
கண்டாடித்துள்ளாடிக் கள்ளாடுந்தும்பியைக்
கொண்டாடிக்கொண்டாடிக்கூத்தாடிக்கொண்டானே.

### சிங்கனுக்கும் சிங்கிக்கும் சம்வாதம்

#### இராகம்-தன்பாசி-ஆதிதாளம்

#### கண்ணிகள்.

சிங்கன்-இத்தனைநாளாகவென் னுடன்சொல்லாமல்
எங்கேநடந்தாய்சிங்கி — எங்கே

சிங்கி-கொத்தார்குழலார்க்குவில்தாரமாக
குறிசொல்லப்போனேனடாசிங்கா — குறிசொல்

சிங்கன்-பார்க்கிலதிசயந்தோணுதுசொல்லப்
பயமாயிருக்குதடிசிங்கி — பயமா

சிங்கி-ஆர்க்குப்பயமினித்தோணினகாரியம்
அஞ்சாமற்சொல்லடாசிங்கா — அஞ்சா

சிங்கன்-காலுக்குமேலே பெரியவிரியன்
கடித்துக்கிடப்பானேன்சிங்கி — கடித்து

சிங்கி-சேலத்துநாட்டிற் குறிசொல்லிப்பெற்ற
சிலம்புகிடக்குதடாசிங்கா — சிலம்பு

சிங்கன்-சேலத்தாரிட்டசிலம்பிற்குமேலே
திருகுமுருக்கென்னடிசிங்கி — திருகுமு

சிங்கி-கோலத்துநாட்டார் முறுக்கிட்டதண்டை
கொடுத்தவரிசையடாசிங்கா — கொடுத்த

சிங்கன்-நீண்டுங்குறுகியும்நாங்கூழ்ப்போல
நெளிந்தநெளிவென்னடிசிங்கி — நெளிந்

சிங்கி-பாண்டியனூர்மகள்வேண்டுங்குறிக்காக
பாடகமிட்டதடாசிங்கா — பாடக

சிங்கன்-மாண்டத்தவளையுன்காலிலேகட்டிய
மார்க்கமதேதடிசிங்கி — மார்க்கம

சிங்கி-ஆண்டவர்குற்றால சந்நிதிப்பெண்க
ளணிமணிக்கேச்சடாசிங்கா — அணிமணி

சிங்கன்-சுண்டுவிரல்தோறுங்குடலைப்பூசி
சுருண்டுகிடப்பானேன்சிங்கி — சுருண்டு

சிங்கி-கண்டியேதேசத்திற் பண்டுநான்பெற்றது
காலாழிபீலியடாசிங்கா காலாழி

சிங்கன்-மெல்லியபூந்தொடைவாழைக்குறுத்தை
விரித்துமடித்தவராார்சிங்கி விரித்து

சிங்கி-நெல்வேலியார்தந்தசல்லாபச்சோலை
நெறிபிடித்தேகொடுத்தார்சிங்கா நெறி

சிங்கன்-ஊருக்குமேற்கேயுயர்ந்தவாசிலே
சாரைப்பாம்பேதடிசிங்கி சாரைப்

சிங்கி-சீர்பெற்றசோழன்குமாரத்தியார்தந்த
செம்பொன்னரைஞாணடாசிங்கா செம்பொ

சிங்கன்-மார்பிற்குமேலே புடைத்தசிலமதியில்
கொப்புளங்கொள்வானேன்சிங்கி கொப்புள

சிங்கி-பாருக்குள்ளேற்றமாம் காயங்குளத்தார்தந்த
பாரமுத்தாரமடாசிங்கா பாரமு

சிங்கன்-ஆகாவடமெல்லாமங்ஙனேகூடாவே
ஆவாரைபூத்ததடிசிங்கி ஆவாரை

சிங்கி-ஏகாவடமென்றுசீர்காழியாரெனக்
கிட்டவரிசையடாசிங்கா கிட்டவரி

சிங்கன்-எட்டுப்பாவைகுழுறுங்கழுத்திலே
பத்தெட்டுப்பாம்பேதடிசிங்கி யத்தெ

சிங்கி-கூட்டத்துநாட்டாரும் காயகுளத்தாரும்
இட்டசவளியடாசிங்கா இட்டசவ

மேற்படி வேறு.

இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்

கண்ணிகள்.

சிங்கன்-வள்ளிக்கொடியிலேதுத்திப்பூப்பூர்ப்பானேன் சிங்கி
சிங்கி-காதில்வங்காளத்தாரிட்ட சிங்காரக்கொப்படா சிங்கா
சிங்கன்-கள்ளியப்பூபூர்ப்ப ததிசயமல்லவே சிங்கி
சிங்கி-தெற்கு-வள்ளியூராறந்தமாணிக்கத்தண்டோடா சிங்கா
சிங்கன்-வண்ணக்குமிழிலே புன்னையரும்பேது சிங்கி
சிங்கி-மண்ணில்-துன்னீர்ச்சலாபத்துமுத்துமூக்குத்திகாண் சிங்கா
சிங்கன்-சொருகிமுடித்ததில் தூக்கணமேதடி சிங்கி
சிங்கி-தென்-குருகையூரார்தந்தகுப்பியுந்தொங்கலுஞ் சிங்கா
சிங்கன்-விந்தையாமேலெல்லா மின்வெட்டிப்பார்ப்பானேன் சிங்கி
சிங்கி-இந்தவண்ணப்பணிகளின்மாணிக்கக்கல்லொளி சிங்கா

சிங்கன்-முலையென்றுசொல்வதை முடிக்கிடப்பானேன் சிங்கி

சிங்கி-செஞ்சிவிலைமாதர்தந்தது வேடிக்கைக்கச்சடா சிங்கா

சிங்க - மூடிக்கிடப்பவும் நாற்றங்குலைப்பானேன் சிங்கி

சிங்கி-இதுஆடித்திருத்தக்கால்வாடைப்பொடியடா சிங்கா

சிங்கன்-அந்தப்பொடியால் முலைவீக்கம்போமோ சிங்கி

சிங்கி-வீக்கம்ஆனாலுனக்கென்னபோனாலுனக்கென்ன சிங்கா

சிங்கன்-இந்தப்பணியைநீபூணப்பொறுக்குமோ சிங்கி

சிங்கி-புவிராசர்க்குங்கற்றோர்க்கும்எல்லாம்பொறுக்குங்காண் சிங்கா

சிங்கன்-குல்லத்தைப்பார்த்தால்கொடியிடைதாங்குமோ சிங்கி

சிங்கி-தன்-கொடிக்குச்சுரக்காய்கனத்துகிடக்குமோ சிங்கா

சிங்கன்-இல்லாதசித்தெல்லாம் எங்கேபடித்தாடி சிங்கி

சிங்கி-நாட்டில்நல்லாரைக்கண்டாருக்கெல்லாம்வருமடா சிங்கா

சிங்கன்-பெட்டகப்பாம்பைபிடித்தாட்டவேண்டாமோ சிங்கி

சிங்கி-இந்தவெட்டவெளியிலேகோடிப்பாம்பாடுமோ சிங்கா

சிங்கன்-கட்டிக்கொண்டேசற்றே முத்தங்கொடுக்கவோ சிங்கி

சிங்கி-நடுப்பட்டப்பகலில்நானெட்டிக்கொடுப்பேனோ சிங்கா

சிங்கன்-முட்டப்பட முலையானையைமுட்டவோ சிங்கி

சிங்கி-காமம்-மட்டுப்படாவிட்டால்மண்ணோடேமுட்டடா சிங்கா

சிங்கன்-சேலையுடைதன்னைச் சற்றேநெகிழ்க்கவோ சிங்கி

சிங்கி-சும்மா-நாலுபேர்முன்னென்னைநாணங்கெடுக்காதே சிங்கா

சிங்கன்-பாதம்வருடித் துரைகுத்தம்வேண்டாமோ சிங்கி

சிங்கி-மனம்போதம்வருடிப்போய்ப்பூனையைக்குத்தடா சிங்கா

சிங்கன்-நாக்குத்துடிக்குது நல்வாயிழுக்குது சிங்கி

சிங்கி-உன்றன்வாய்க்குள்ளிருப்பதுமாலைக்களல்லவோ சிங்கா

சிங்கன்-ஒக்கப்பகிக்கவோஒதுக்கிடம்பார்க்கவோ சிங்கி

சிங்கி-பருங்கொக்குப்படுக்கக் குறியிடம்பாரடா சிங்கா

சிங்கன்-விந்தைக்காரியுன்னைவெல்லக்கூடாதடி சிங்கி

சிங்கி-அதுசந்தேகமோவுன்தலைப்பேனைக்கேளடா சிங்கா

சிங்கன்-தென்னாடெல்லாமுன்னைத்தேடித்திரிந்தேனே சிங்கி

சிங்கி-அப்பா விந்நாட்டில்வந்தென்னையெப்படிநீகண்டாய் சிங்கா

சிங்கன்-நன்னகர்குற்றால நாதரைவேண்டினேன் சிங்கி

சிங்கி-மணிப்-பன்னகம்பூண்டாரைப்பாடிக்கொண்டாடுவோம் சிங்கா

சிங்கன்-பாடிக்கொள்வாரெவ ராடிக்கொள்வாரெவர் சிங்கி

சிங்கி-நீதான்பாடிக்கொண்டாற்போதுமாடிக்கொள்வேனடா சிங்கா

சுற்றுதலூர்தோருஞ் சுத்தவேண்டாம்புவியீர்
குற்றாலமென்றொருக்காற் கூறினன்-வற்றா
வடவருவியானே மதுபிறவிச்சேற்றி
னடவருரியா ளமை.

வாழ்த்து கண்ணிகள்.

க. கொற்றமதிச்சடையானைக் குறும்பலாவுடையானை
வெற்றிமழுப்படையானை விடையைவாழ்த்துகிறேன்.

உ. தாதையில்லாத்திருமகனைத் தடமலைக்குமருமகனை
வேதசங்கவிதியானை வேதியனைவாழ்த்துகிறேன்.

ங. தந்திமுதற்கொருகோனைத் தமிழிலஞ்சிமுருகோனை
மைந்தரெனுமிறையோனை மறையோனைவாழ்த்துகிறேன்.

ச. தீமுகத்திற்பரிகொடுத்த திருமுடிக்காயொருமுடியை
மாமனுக்குவரிசையிட்ட மாமனைவாழ்த்துகிறேன்.

ரு. காமனுக்குபூமனுக்குங் கன்னிதெய்வானைக்கும்
மாமனெனவேபகரும் வளன்றனைவாழ்த்துகிறேன்.

சூ. நீடுலகெலாமளந்த நெடியமாலும்மயனும்
தேடரியதிரிகூடற் செல்வனையான்வாழ்த்துகிறேன்.

எ. சித்ரநதியிடத்தானைத் தேனருவித்தடத்தானைச்
சித்ரசபைநடத்தானைத் தி- த்தானைதாழ்த்துகிறேன்.

அ. காலவயிரவனைக் காவில்வளர்த்தவனை
மேலைவாசப்பலனை மென்மேலும்வாழ்த்துகிறேன்.

கூ. கருதுலகமெங்கும்புகழ் கன்னிமார்பெண்களையும்
வரிசைதுரைதனமாய் மாமனையும்வாழ்த்துகிறேன்.

ம. பனகமணிபூண்டவனைப் பக்தர்களையாண்டவனை
அனவரதத்தாண்டவனை யாண்டவனைவாழ்த்துகிறேன்.

இதவுமது விருத்தம்.

வார்வாழுந்தனத்திகுழல்வாள்மொழியம்பிகைவாழிவடவைபூற்குந்
தார்வாழிதிரிகூடத்தார்வாழி குருமுனிவன்றலைநாட்சொன்ன
பேர்வாழியரசர்கள்செங்கோல்வாழிகன்னகப்பேராலோங்கும்
ஊர்வாழிகுற்றாலத்தவத்தடியார்வாழிநீடூழிதானே.

திருக்குற்றாலக்குறவஞ்சி

முற்றிற்று.

---